# தமிழ்ச் சமூகவியல்

## ஒரு கருத்தாடல்

முனைவர் தாயம்மாள் அறவாணன்



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# தமிழ்ச் சமூகவியல்

## ஒரு கருத்தாடல்

முனைவர் தாயம்மாள் அறவாணன்
பேராசிரியர் & தமிழியல் துறைத் தலைவர்
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
கொடைக்கானல்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**International Institute of Tamil Studies**
*C.P.T. Campus, Taramani, Chennai - 600 113*

பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் - நாடார் மகாசன சங்கம், மதுரை)

வரிசை எண்: 5 நாள்: 01-11-2002

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamiḻ-c-camūkaviyal - oru karuttāṭal |
| Author | : | Dr. Thayammal Aravaanan |
| General Editor | : | Dr. Annie Thomas |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113.<br>Phone : 254 2992 |
| Publication No. | : | 435 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2002 |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii + 88 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 25/- (Rupees Twenty Five only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | Sociology |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

சமூகம் என்பது ஒரு கூட்டு வாழ்க்கை. கூட்டு வாழ்க்கை மனித இனத்தைப் பண்படுத்துகின்றது. எந்தவொரு தனி மனித வாழ்வும் இக்கூட்டு வாழ்க்கையில் பின்னிப் பிணைந்ததாக அமைய வேண்டும். இந்த் அமைப்பில்தான் பல்வேறு நெறிமுறைகளும், பண்பாட்டுக் கூறுகளும், பண்பாட்டு அடையாளங்களும் பொதிந்து கிடக்கும். இத்தகைய அடையாளங்கள் சமூகத்தின் அங்கமாகிய தனிமனித வாழ்வை வெளிப்படுத்திக் காட்டுவனவாக அமைந்துவிடும். இதையே Society is a definite, determinate network of associations, Institutions, Groups with cultural symbols and values interwoven among them என Renold Fletcher என்ற அறிஞர் கூறுவதைக்காண முடிகிறது. எனவே நம்முடைய சமூகமும் இதற்கு விதிவிலக்கன்று. தொன்மைக் காலம் தொட்டு இன்று வரை தமிழ்ச் சமூகத்திற்கெனப் பல்வேறு பண்பாட்டு அடையாளங்கள் இருந்ததை நம்மால் இனம்காண முடியும். இவ்வடையாளங்களை இனங்காண்பதால் தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சியையும், மேம்பாட்டையும் உணர முடியும். ஒரு சமூகம் புறநிலைத் தாக்கத்தாலும், அகநிலை மாற்றங்களாலும் எந்த அளவிற்குத் தன்னை வடிவமைத்துக் கொள்கிறது என்பதை இத்தகைய அடையாளங்களால் அறியவியலும். எனவே ஒரு சமூகத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதும், அச்சமூகத்தை ஆய்வு நோக்கில் நின்று ஆராய்வதும், இவற்றின் காரணமாக அச்சமூக மேம்பாட்டுக் குரிய ஆலோசனைகளை வழங்குவதும் இன்றைய நிலையில் தேவையானவையாகக் கருதப்படுகின்றன.

இவ்வகையில் பெருந்தலைவர் காமராசர் அவர்கள் பெயரால் இந்நிறுவனத்தில் அமைக்கப்பட்டுள்ள அறக் கட்டளையின் 5-ஆம் சொற்பொழிவாக இச்சொற்பொழிவு அமைகிறது. அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் தாயம்மாள் அறவாணன் அவர்கள் '**தமிழ்ச்சமூகவியல் – ஒரு கருத்தாடல்**' என்ற பொருளில் இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்துவது பெருமைக்குரிய ஒன்றாகும். சமூகவியல் பற்றிய அவர்களின்

சிந்தனை வெளிப்பாடாகவும், மகளிரியல் குறித்து அவர்கள் கருத்தில் விளைந்த ஆய்வுப் போக்கின் சிதறலாகவும், இச்சொற்பொழிவு மிகச்சிறப்பாக அமைந்துள்ளது. சொற்பொழிவு நாளன்றே இதனை நூலாகவும் வெளியிடுவதில் இந்நிறுவனம் பெருமை அடைகிறது.

இந்நூலாசிரியர் சமூகவியல், மானுடத் தோற்றம், திருமணம், குடும்பம், அரசு, சாதி, மதம், சமூக நோயியல் என்னும் உள் தலைப்புகளில் இவ்வாய்வை அமைத்திருக்கிறார். தமிழ்ச் சமூகவியல் பற்றி அறிந்துகொள்ள விழைவார்க்கும், சமூகவியல் நோக்கில் தமிழ் இலக்கியங்களை ஆய்வு செய்ய எண்ணுவார்க்கும் உற்ற துணையாக இந்நூல் அமையும் என்பதில் ஐயமில்லை. பல்கலைக்கழகங்கள் மற்றும் கல்லூரிகளில் சமூகவியல் பாடத்தை எளிமையாகப் புரிந்து பயிலும் நிலையில் இந்நூல் அதற்குரிய பாடநூலாக அமையும் தகுதியையும் பெறும் என்பதைப் பெருமையுடன் கூறிக்கொள்கிறேன்.

இச்சொற்பொழிவை மிகச் சிறப்பாக அமைத்து, நூல் வடிவில் வெளியிட உரிய நேரத்தில் எழுத்துருவைத் தந்துதவிய பேராசிரியர் தாயம்மாள் அறவாணன் அவர்களுக்கு என் நன்றியும், பாராட்டுகளும் உரியன. இந்த நூல் வெளிவர அனைத்துப் பணிகளையும் செய்த இவ்வறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கு நன்றி.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு **கல்வியமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திரு. பு.ஏ. இராமையா,** இ.ஆ.ப. அவர்களுக்கும், கூடுதல் செயலாளர் திரு. தா. சந்திரசேகரன், இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலிற்குச் சிறந்த முறையில் ஒளியச்சுக்கோப்புச் செய்த திருமதி ந. லட்சுமிக்கும், அழகிய முறையில் அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

சென்னை
31-10-2002

இயக்குநர்

# ஆசிரியரைப் பற்றி



- புகழ்மிக்க பச்சையப்பன் நிறுவனப் பேராசிரியராகப் பணியாற்றியவர்.
- செனகால் நாட்டு அதிபர் கவிஞர் லியோபோல்டு செதார் செங்கோர் அவர்களால் தக்கார் பல்கலைக்கழக இலக்கியத் துறையில் இணைப் பேராசிரியராக அமர்த்தப் பெற்றவர்.
- அமெரிக்கா, ஐரோப்பா கண்டங்களிலுள்ள நாடுகளுக்குப் பயணித்தவர்.
- இவர்தம் திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு என்னும் நூலுக்குத் தமிழக அரசு முதற்பரிசையும், 'குழந்தை ஓர் இலக்கியப் பகுப்பாய்வு' என்னும் நூலுக்குப் பாண்டித்துரைத் தேவர் - தமிழ்ச் சங்க முதற்பரிசையும் பெற்றவர்.
- பன்னிரண்டு நூல்களின் ஆசிரியரான இவர் 'அவ்வையார் அன்று முதல் இன்று வரை' என்னும் மிகச் சிறந்த ஆய்வு நூலை உழைத்து எழுதியமைக்காகத் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றமும் நியூ செஞ்சுரி புத்தக நிறுவனமும் இணைந்து நடத்திய இலக்கியப் போட்டியில் பரிசை வென்றவர்.
- இப்போது கொடைக்கானல் அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத் தமிழியல் துறையின் தலைவராயும் பேராசிரியராயும் பணியாற்றி வருபவர்.

# உள்ளுறை

# 1

# தமிழ்ச்சமூகவியல்

சமூகவியல் எனும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வறக் கட்டளைப் பொழிவுநூல் சமூக இயலை, அகரம் முதல் னகரம் வரை எடுத்துரைக்க எழுதப்பட்டது அன்று. குறுகிய காலத்திலும் குறைந்த பக்கங்களிலும் அது இயலக் கூடியதும் அன்று. சமூக இயலில் பொதிந்துள்ள முதன்மையான செய்திகளைத் தமிழர் வரலாற்றுடனும், தமிழ்ச் சமூகத்துடனும், தமிழ் இலக்கியங்களுடனும் ஓரளவு பொருத்திப் பார்க்கும் முயற்சியே இப்பொழிவில் மேற்கொள்ளப்பெற்றுள்ளது. எனவே சமூக இயலைப் பற்றிய ஓர் அடிப்படை நூல் அன்று இது. தமிழ்ச் சமூகத்துடன் பொருத்திப் பார்க்கும் ஓர் அறிமுகப் பொழிவாகவே கொள்ளத்தக்கது.

## 1.1 மார்க்சீயச் சமூகவியல்

தமிழ் வாசகரிடையே காரல் மார்க்சின் வர்க்க அடிப்படையிலான பொருளியல் மையம் கொண்ட மார்க்சீய சமூகவியல் மிகப் பரவலாகப் பரவி உள்ளது. ஏங்கல்சின் 'குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்' எனும் நூலும் (1884) தமிழ் இலக்கிய ஆய்வாளரிடையே மிகப்புகழ் பெற்ற ஒன்றாகும். சமூகவியல் கோட்பாடுகளின் மார்க்சீயம் சார் பொருளாதாரக் கோட்பாடு ஒருவகை. அவ்வளவே. சமூக இயல் என்று சொன்ன அளவிலேயே அது முற்ற முழுக்க மார்க்சீய சமூக இயல் என்று முடிவு செய்வது சரியான தாகாது. எந்த இசத்தையும் இவ்வறக் கட்டளைப் பொழிவு முன்னிறுத்தவில்லை.

## 1.2 சமூகவியல் துணை நூல்கள்

அறிஞர் டி.பி. போட்டோமோர் (T.B. Bottomore) எழுதிய 'Sociology' - A guide to Problems and Literature, அறிஞர் பாஸ்கல் கிஸ்பர்ட் (Pascaul Gisbert, S.J.) எழுதிய 'Fundamentals of Sociology' என்னும் நூலின் தமிழாக்கம், டாக்டர் டி. சுந்தரம் அவர்களைப் பதிப்புக் குழுத் தலைவராகக் கொண்டு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுள்ள சமூகவியல் இரு தொகுதிகள், அறிஞர் கோ. இலட்சுமிரதன் பாரதி எழுதிய 'நமது சமூகம்' ஆகிய நுல்களும், என் கணவர் அறிஞர் க.ப. அறவாணன் எழுதிய நூல்களான 'தமிழிலக்கியச் சமூகவியல், தமிழ்ச் சமுதாயம் நோயும் மருந்தும், தமிழ்ச் சமுதாய வரலாறு, முதலான நூல்களும், கட்டுரைகளும், சமூகவியல் எனும் தலைப்பிலான இவ்வறக் கட்டளைச் சொற்பொழிவிற்குத் துணையாக இருந்தன.

## 1.3 தமிழ்ச் சமூகவியல் ஓர் அறிமுகம்

இப்பொழிவைத் தமிழ்ச் சமூகவியல் - ஓர் அறிமுகம் எனத் தலைப்பிட்டுக் கருதுதல் மிகப் பொருந்தும்.

சமூக இயல் கருத்துகளுடன் தமிழ்ச் சமுதாய நடப்புகளை ஒப்பிட்டுக்காட்டும் பகுதிகள் முடிந்த முடிவானவை அல்ல. அவை மேலும் ஆய்வுக்கு உரியவை. மிகக் குறுகிய காலத்தில் இந்நூல் அணியமாகி உள்ளமையால் பல கருத்துகள் விடுபட்டிருக்கலாம். வாசகர்கள் பொறுத்துக்கொள்ள வேண்டுகிறேன்.

## 1.4 நன்றிக்குரியோர்

இவ்வறக்கட்டளைப் பொழிவு நிகழ்த்த என் பெயரைப் பரிந்துரை செய்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்கும், உரிய தெரிவுக் குழுவிற்கும், அதன் இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் தொடர்புடைய இன்ன பிறர்க்கும் நன்றி கூறி அமைகிறேன்.

10-10-2002 தாயம்மாள் அறவாணன்

# ௨

# சமூகவியல்

## 2.1 மனிதன் விலங்கே

மனிதன் அடிப்படை,யில் விலங்குத் தன்மைகள் உடையவன் ஆவான். விலங்குகள் ஒவ்வொன்றும் தத்தமக்கு உரிய நல்ல தன்மைகளையும் அல்ல தன்மைகளையும் கொண்டிருக்கின்றன. மனிதரோ பல விலங்குகளின் நல்ல இயல்புகளையும் அல்ல இயல்புகளையும் கொண்ட கொடும்விலங்கு ஆவர். சக மனிதர்களுக்கும் சக உயிர்கள் அனைத்துக்கும் ஊறு செய்யும் தலைமை விலங்கு ஆவர். மனிதருடைய இயல்பு: தனியாக இருக்க முடியாது; குழுவாகவும் கூட்டமாகவும் இருப்பதே இயல்பு. மனிதனுடைய குழு அல்லது கூட்டமே சமூகம் (Society) எனப் பெறுகிறது. ஒருவருக்கு மேல் பலராகக் கூடும்பொழுதும் கூடி வாழும் போதும் விட்டுக் கொடுத்தலும் பெற்றுக்கொள்ளுதலும் நிகழுகின்றன. எனவே ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களிடம் கொண்டிருக்கிற சிக்கலான சமூக உறவுகளையும், தொடர்புகளையுமே சமூகம் என்று குறிப்பிடுகிறோம்.

## 2.2 சமூகம் என்றால் என்ன?

சாலையில் இருவர் எதிரும் புதிருமாக நடந்து கடப்பார்களேயானால் அவர்கள் இடையே உள்ள 'கடத்தல்' சமூக உறவு ஆகாது. மாறாக ஒருவரை ஒருவர் கடக்கும்போது நிகழும் சந்திப்பும் செலுத்தும் வணக்கமும் ஒருவரை ஒருவர் விசாரிப்பதும் தாம் சமூகத் தொடர்புகளுக்கு அடிப்படை ஆகின்றன. ஆகவே இரண்டு அல்லது மேற்பட்ட மனிதர் ஒருவர் இருப்பதை மற்றவர்

உணர்ந்து தங்களுக்கு இடையே பொதுவான ஏதோ ஒன்று இருப்பதையும் அறிந்து பரிமாறிக் கொள்ளும் தொடர்பே சமூகத் தொடர்பு ஆகும். இந்த மனிதத் தொடர்பே ஆண் பெண் தொடர்பாகவும், குடும்பமாகவும், குடும்பங்களாகவும், சொந்தமாகவும் பரிணமிக்கிறது. தெரு, ஊர், வட்டம், மாவட்டம், நாடு, உலகம் என்று விரிவடைகிறது.

## 2.3 மனிதன்: சமூக விலங்கு

தனியாக வாழாமல் கூட்டத்தோடு கூடி வாழும் இயல்புடையவன் மனிதன் என்பதால் மனிதனை ஒரு சமூக விலங்கு என்றே அரிஸ்டாட்டில் குறித்தார். தன்னுடைய தேவைகளுக்காகவும் பாதுகாப்புக்காகவும்; சுகத்துக்காகவும், நலத்துக்காகவும், வாழ்க்கை ஏந்துகளுக்காகவும், வாழ்க்கை வசதிக்காகவும், பிற தேவைகளுக்காகவும், ஏனைய மனிதர்களோடு சேர்ந்து வாழ வேண்டிய கட்டாயம் அவனுக்கு இருக்கிறது. இவ்வாறு கூட்டமாகச் சேர்ந்து வாழும் இயல்பு யானை, குரங்கு, மான்கள், காட்டு எருமைகள், காட்டுப் பசுக்கள் முதலானவற்றுக்கும் இருக்கின்றது. அவற்றுக்கு இடையேயும் பாலுணர்வு, உணவுத் தேட்டம், பாதுகாப்பு முதலாய தேவைகள் உள்ளன. எனினும் மனித விலங்கிடையே கண்டுபிடிக்கப்பட்ட மொழி அறிவும், சிந்தனையும் அவற்றுக்குக் களமாக இருந்த மூளையும் பகுத்தறிவும் மனிதரிடையே சமூக அமைப்பை மிகவாக வலுப்படுத்தி உள்ளன. தம்மைப் பாதுகாத்துக் கொள்வதும் பண்படுத்திக் கொள்வதும் பண்பாட்டை வளர்த்துக் கொள்வதும் சமூக அமைவால் சாத்தியம் ஆயின.

## 2.4 சமூகவியற் கோட்பாடுகள்

சமூகவியல் ஆய்வில் மிகத் தலைமையானவை இரண்டு கோட்பாடுகள் ஆகும். ஒரு கோட்பாடு தனி மனிதனை முதன்மைப் படுத்துவது; இன்னொன்று குழு அல்லது சமூகத்தை முதன்மைப்படுத்துவது. மாக்ஸ் வேபர் (Max Weber 1864 - 1920) தனிமனிதன்தான் சமூகத்தின் அடிப்படை அலகு என்று கருதினார். சமூக இயல் விதிகளைக் கண்டுபிடிப்பது இலக்கு அன்று. மனிதர்களைப் புரிந்து கொள்ள உதவும் வழிமுறைகளைக்

கண்டறிவதே இலக்கு என்பதே வேபரின் கருத்தாகும். மிதி வண்டிகளில் செல்லும் இருவர் எதிரெதிரே மோதிக் கொண்டால் அது சமூக உறவு ஆகாது; மாறாக மோதிக் கொள்ளுதலைத் தவிர்க்கும் முறையில் இடம் வலமாகப் பயணிப்பதாலோ மோதும் நிலையில் மோதுவதைத் தவிர்த்தாலோ மோதிய நிலையில் பண்புடன் நடந்து கொண்டாலோ அது சமூக உறவு எனப்பெறும். இத்தகைய வாய்ப்புகளில் மனிதர்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது சமூக எதிர்பார்ப்பு; இச்சமூக எதிர்பார்ப்பை ஒட்டி நடந்து கொள்வதுதான் சமூக ஒழுகலாறு.

## 2.5 மனிதனை நெறிப்படுத்தும் அதிகாரம் சமூகத்திற்கே

சமூக வாழ்க்கையைச் சமூகப் பொருண்மைகளை (Social facts) ஆராய்தல் வேண்டும்; கூட்டாக நடவடிக்கைகளில் ஈடுபடுதல், சிந்தித்து உணர்தல் என்பன தனி மனிதரிடமிருந்து தோன்றினாலும் அவர்களில் இருந்து வேறுபட்டு வெளியே அவை நிற்பதாலும் அவை தனிமனிதனைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பதாலும் சமூகமே அதிகார மையத்தின் அடிப்படை என்பதாகவும் வாதிட்டனர். சமூகவியலின் தந்தை எனப்பெறும் ஃபிரஞ்சு சமூகவியல் அறிஞர் எமில் துர்கேம் (Emile Durkheim 1858 - 1911) இக்கோட்பாட்டை முன்னிறுத்தி வற்புறுத்தினார்.

இக்கோட்பாடுகள் அன்றிப் பரிணாம உயிரிக் கொள்கைகள் இயற்கைப் பகுப்பாய்வுக் கொள்கைகள், பொருளாதாரம் அடியொற்றிய கோட்பாடுகள், அமைப்புசார் கொள்கைகள் முதலாயினவும் சமூகவியலில் காலந்தோறும் வேறுவேறு அறிஞர்களால் வற்புறுத்தப்பட்டு வருகின்றன.

# 3

# மானுடத் தோற்றம்

## 3.1 கடவுளே மனிதரைப் படைத்தார்

கடவுளே உலகைப் படைத்தார்; உயிரைப் படைத்தார்; உலகத்தில் உள்ள பெரும்பான்மையான மக்கள் உலகத் தோற்றம் பற்றியும், உயிர்த் தோற்றம் பற்றியும் மேற்கண்ட நம்பிக்கையையே கொண்டிருந்தனர்; இன்றும் சிலர் கொண்டுள்ளனர். அயர்லாந்து நாட்டைச் சார்ந்த பேராயர் ஜேம்ஸ் உஷ்ஷர் (Archbishop James Ussher of Almargh) கி.பி. 1650-இல் விவிலியச் சான்றுகளை மையமாகக் கொண்டு, உலகம் கி.மு. 4004ஆம் ஆண்டு அக்டோபர் 23-ஆம் நாள் காலை ஒன்பது மணிக்குக் கடவுளால் படைக்கப் பட்டது என்று விளக்கினார். அக்காலத்தில் அக்கருத்தை மறுப்போர் இல்லை. 17-ஆம் நுற்றாண்டில் வாழ்ந்த ஐசக் தி பெர்ரி (Isaac De La Poyrer'e) என்ற பிரெஞ்சு அறிஞர் பிரெஞ்சு நாட்டுச் சிற்றூர்ப் புறங்களில் சிதறிக் கிடந்த ஒழுங்குபடுத்தப்பட்ட கூர்ங் கற்களைத் திரட்டிக் கடவுளால் படைக்கப்பட்ட ஆதாம் ஏவாளுக்கு முன்பே தொல் மனிதன் வாழ்ந்து இருத்தல் வேண்டும் என்று எழுதினார். அவர்தம் நூல் 1655-இல் வெளியாயிற்று. ஆனால் மேற்கண்ட நூல் பொது இடங்களில் வைத்து எரிக்கப்பெற்றது. தொடர்ந்து உலகத் தோற்றம் பற்றியும், மனிதத் தோற்றம் பற்றியும் அறிவியல் அடிப்படையில் விளக்கும் முயற்சிகள் பல மேற்கொள்ளப் பெற்றன. ஜாக்ஸ் பூச்சர் (Jaques Boucher de Perthes) என்ற பிரெஞ்சுத் தொல்லியல் ஆர்வலர் ஐந்து தொகுதிகளை வெளியிட்டார். 1838-39 ஆகிய ஆண்டுகளில் அவர்தம் கருத்துகள் இரண்டு அறிஞர் குழுக்களின் முன்னிலையில் வைக்கப்பெற்றன. யாரும் அவர் கருத்தை ஏற்கவில்லை.

## 3.2 மனிதத் தோற்றம் பரிணாம வளர்ச்சியே

*23-ஆம் வயதில், கி.பி. 1832-இல் ஊதியம் எதுவும் பெறா உயிரியல் ஊழியராகச் சார்லஸ் டார்வின். பிகின் எனும் கப்பலில் பயணம் மேற்கொண்டார். ஐந்து ஆண்டுகள் தாயகம் திரும்பாமல் கப்பல் வழி உலக இயற்கை உயிர்களை ஆராய்வதில் ஈடுபட்டார். அவர்தம் முயற்சி 1859-இல் 'ஆன் தி ஆரிஜன் ஆப் ஸ்பீஷிஸ்' (*On the Origin of Species*) எனும் நூலாகவும், 1871-இல் 'டீசன்ட் மேன்'* (The Descent of Man) *எனும் நூலாகவும் வெளிவந்தது. மனித உயிர்த் தோற்ற வரலாற்றில் டார்வினின் படைப்புகள் பெரும் திருப்புமுனையை ஏற்படுத்திய கொடுமுடிகள் ஆகும். டார்வின் ஆராய்ச்சிக்குப் பிறகு மனிதர்கள் ஒரே கணத்தில் யாராலும் படைக்கப்பட்டவர்கள் அல்லர். பல இலட்சக்கணக்கான ஆண்டுகளின் பரிணாமமே மானுடமூலம் என்ற கருத்தை உலகம் ஒப்புக் கொள்ளத் தொடங்கியது.*

*முதல் மனிதன் தோன்றியது எவ்வாறு, என்பதற்குப் பதில் கிடைத்துவிட்டது. அவன் என்று தோன்றினான், எங்குத் தோன்றினான் என்பன அடுத்த ஆராய்ச்சிப் பொருள்கள் ஆயின.*

*மனிதன் படைக்கப்பட்டவன் அல்லன்; பிரைமேடா எனும் பாலூட்டி வகுப்பைச் சேர்ந்தவன்; முதுகு எலும்புள்ள விலங்கினம். ஏனைய உயிர் இனங்களைப் போலவே சூழ்நிலை வற்புறுத்துதல்களால் புதிய உருவம் பெற்ற ஓர் இனம். பாலூட்டி எனும் வகுப்பில் ஐந்து பெரும் குடும்பங்கள் உள்ளன.*

| | | |
|---|---|---|
| *முதல் குடும்பம்* | - | *லெமூர்* |
| *இரண்டாம் குடும்பம்* | - | *டார்சியெஸ்* |
| *மூன்றாம் குடும்பம்* | - | *பாபுலான் குரங்கு* |
| *நான்காம் குடும்பம்* | - | *கிப்பர், ஊரங்கொட்டான், சிம்பன்சி, கொரில்லா* |
| *ஐந்தாம் குடும்பம்* | - | *மனித இனம்* |

*இன்றைய மனித இனம் கிட்டத்தட்ட 10 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒருவகைக் குரங்குகளில் இருந்து தோன்றியதாகும். வேறு பல மானுட இனங்கள் தொல்*

பழங்காலத்தில் வாழ்ந்தன. காலப்போக்கில் அவை அழிந்தன. இன்றைய மனித இன முன்னோர் கோமோசாப்பியன்ஸ் (Homo Sapiens) எனப்படுவர். இம்முன்னோர் எங்கு வாழ்ந்தனர் என்ற ஆராய்ச்சி அறிஞர் பலரால் பல இடங்களில் மேற்கொள்ளப் பெற்றது. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஏர்னஸ்டு எக்கேல் (Harnest Hichael) என்ற செருமானிய உயிரியல் அறிஞர் மானுட குலத்திற்கு முன்னோடி இனத்தைத் தெற்கு ஆசியாவில் கண்டுபிடிக்கலாம் என்று சுட்டிக்காட்டினார். இவ்வாறு அவர் சுட்டிக்காட்டுவதற்குக் காரணங்கள் இருந்தன. மானுட முன்னோரோடு நெருக்கமான கொரில்லா, சிம்பன்சி, ஊரங்கொட்டான் ஆகிய குரங்குகள் ஆப்பிரிக்காவிலும், ஆசியாவிலும் மட்டுமே இருந்தன. அவை வெப்ப மண்டல நாடுகளாக இருந்தமை ஒரு காரணம்.

ஹாலந்து நாட்டு ஆம்ஸ்டர்டாம் பல்கலைக்கழகத்தில் உடல் உறுப்பு அமைப்புத் துறை விரிவுரையாளரான டாக்டர் ஈக்னே தூபுவா (Eugene Duboiva) என்ற இளைஞர் தம் வேலையை விட்டு விலகி, ஆசியாக் கண்டத்திற்குச் செல்வது, சென்று பண்டை மானுட எச்சங்களைத் தேடுவது என்று முடிவு செய்தார். ஏனையோர் அஞ்சினர்; கேலி செய்தனர். தூபுவா சுமத்ராவில் உள்ள ராயல் டச் (Royal Dutch) இராணுவத்தில் சேர்ந்தார். பலவேறு இடங்களில் மலை அளவு நிலத்தைத் தோண்டித் தேடினார். மாறி மாறிப் பல இடங்களில் தோண்டியும் வெற்றி கிடைக்கவில்லை. இரண்டு ஆண்டு முயற்சி பலன் அளிக்கவில்லை. என்றாலும் அவர் மனம் சோரவில்லை. சுமத்ரா தீவை விட்டு ஆறுகள் உள்ள ஜாவாவில் தேடும் முயற்சியை மேற்கொண்டார். ஜாவா தீவின் நடுவில் சோலோ என்ற ஆறு ஓடுகிறது. திரிநீல்' எனும் பகுதியில் (எரிமலைச் சாம்பலால் மூடிக்கிடந்தது அப்பகுதி) தோண்டப் பெற்றது. அவர் முயற்சி வீணாகவில்லை. மனிதக் கால் எலும்பும் வாலில்லாக் குரங்கின் மண்டை ஓடும் கிடைத்தன. அவர் தம் ஆய்வு முடிவை வெளியிட்டார்.

தூபுவா கண்டெடுத்த எலும்பு, 15 மீட்டர் ஆழத்தில் கிடைத்தது. ஐந்து இலக்கம் ஆண்டுகளுக்கும் முற்பட்ட காலத்தில் உருவாகி இறுகிவிட்ட படிகளில் அது கண்டெடுக்கப்பெற்றது.

கண்களுக்கும் மூக்குப் பொருத்துக்கும் மேல் ஒரே முழுமையான எலும்பு கொண்ட சரிவான நெற்றி; மிகுந்த நீளமுடைய நெற்றி எலும்பு; பெருத்த விழியடிக் குறுக்கம்; தட்டையான உச்சி மண்டை; மிக அகலமான மண்டையோட்டின் கீழ்ப்பகுதி; 900 கன சென்டி மீட்டர் அளவுடைய பெரிய மண்டையோடு.

மேற்கண்ட மீட்டுருவ அமைப்பு, மிக வளர்ச்சி குன்றிய மனிதனுடையது என்று உய்த்துணரப்பட்டது. 1890-இல் ஜாவா வாதியாக் எனும் ஊரில், இரண்டு மண்டையோட்டுச் சிதைவுகளைக் கண்டறிந்தார் அவர்.

தொடர்ந்து தூபுவா முயற்சியில் 1892இல் 15 கி.மீ. தொலைவில் தொடை எலும்பு ஒன்று கண்டு எடுக்கப்பட்டது. இத்தொடை எலும்பு வடிவத்திலும், கட்டமைப்பிலும் தற்கால மனிதத் தொடை எலும்பிற்கு மிக நெருக்கமானதாக இருந்தது. எனவே தூபுவா, ஆதிமனித உருவிற்கு 'நிமிர்ந்த நிலை கொண்ட குரங்கு மனிதன்' என்ற பொருள் படைத்த 'பித்திக் தாந்திரோப்ப எரைக்டசு' என்ற கிரேக்க மொழிப் பெயரைச் சூட்டினார். தூபுவாவிற்கு முன்னும் பின்னும் பல முயற்சிகள் பலரால் மேற்கொள்ளப்பெற்றன. அவை வருமாறு:

| ஆண்டு | இடம் | கண்டெடுப்பு |
|---|---|---|
| 1856 | சென்-கோதான் | கீழ்த்தாடைப்பகுதி |
| 1856 | நியாண்டெர்தால் பள்ளத்தாக்கு, செருமனி | மண்டையோடு |
| 1868 | கிரோமாக்னன், பிரான்சு | மனித எலும்புகள் |
| 1872 | தஸ்கானா, இதாலி | பற்கள் |
| 1884 | தெகி. ஆஸ்திரேலியா | மண்டையோடு |
| 1890 | வாதியாக், ஜாவா | மண்டையோடு |
| 1891 | திரிநீல், ஜாவா | நிமிர்ந்த நிலைக் குரங்கு மனிதன் |
| 1892 | திரிநீல், ஜாவா | நிமிர்ந்த நிலைக் குரங்கு மனிதன் |

| | | |
|---|---|---|
| 1906 | இதாலி, பிரான்சு | நீக்ரோ வகை எலும்புக்கூடு |
| 1907 | ஹைடல்பர்க், செருமனி | மனிதக் கீழ்த்தாடை |
| 1908 | பிரான்சு | நியாண்டெர்தல் |
| 1921 | வட சிம்பாப்வே | மண்டையோடு |
| 1924 | தௌங்சு, ஆஸ்திரேலியா | மண்டையோடு |
| 1925 | தெ. ஆப்பிரிக்கா | மண்டையோடு |
| 1927 | சகாரா | சிம்பன்சி எலும்புக் கூடு |
| 1939 | நைவாசு, கிழக்காப்பிரிக்கா | சிறுவன் நீக்ரோவகை எலும்புக் கூடு |
| 1939 | ஜார்ஜியா, சோவியத் | இரண்டு பற்கள் |
| 1941 | சாங்கிரான், ஜாவா | மூன்று பற்களுடன் கீழ்த்தாடை |
| 1949 | ஆப்பிரிக்கா, ஜோகன்பர்க் | பண்டை மனித மண்டை ஓடு |
| 1950 | தன்சானியா, ஆப்பிரிக்கா | பண்டை மனித மண்டை ஓடு |
| 1952 | கஸ்தியோன்சி | எலும்புக்கூடு |
| 1954 | அல்ஜீரியா | பண்டை மனிதர் |
| 1955 | | கீழ்த்தாடைகள், மண்டை எலும்பு |
| 1955 | ஸ்தாரசேலிய | குழந்தை எலும்புக்கூடு |
| 1958 | தஸ்கானா, இதாலி | பற்கள் |
| 1960 | கிழக்காப்பிரிக்கா | கைதேர்ந்த மனித எலும்பு |
| 1967 | விளதீமிர் | கற்கால மனித எலும்புக் கூடு |

## 3.3 விலங்கு மனிதனாகப் பரிணமித்தமை

ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு நியாண்டெர்தால் மனித வடிவம் தற்கால மானுட குல வடிவத்தை எய்தியது. அப்போது ஆசியக் கண்டத்தில் சில பகுதிகளிலும் அவற்றை அடுத்து ஆப்பிரிக்க ஐரோப்பியப் பகுதிகளிலும் பல்வேறு மானுட இனக் குழுக்கள் தோன்றின. குரங்கு, தற்கால மனிதனாக உருவம் கொள்ள

வகை செய்யத் தலைமையான காரணம் எது என்பது ஆராயத் தக்கது. அன்றைய மானுட குலம் உண்ண, பாதுகாப்புப்பெற நெடிய போராட்டம் நிகழ்த்தியது. உழைப்பு மட்டும் இருந்தது. அப்போது ஏற்படும் சிக்கல்களைத் தீர்க்க மூளைக்கு வேலை ஏற்பட்டது. மீண்டும் மீண்டும் எண்ணும் நிலை ஏற்பட்டமையால் மூளையில் மாற்றம் ஏற்பட்டது. முன்கால்கள் கைகளாக மாறின. கூனி நடந்த நடை நேரான நடை ஆனது; ஆக மூளை, மாறிய முன்கைகள், நடை, அதனால் ஏற்பட்ட பாதங்கள் ஆகியன மனித வளர்ச்சியில் மிகக் குறிப்பிடத்தக்க மாற்றங்கள்.*

# 4

# சமூகவியலின் அடிப்படைகள்

ஒரு சமூகம் என்று இனம் காட்டுவன பின்வருவனவாகும்:

1. திரளான மக்களாகத் திரண்டிருப்பர்.
2. ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் அம்மக்கள் கூடி வாழ்வர்.
3. அங்கு வாழ்வோர் ஒருவரை ஒருவர் நம்மைச் சேர்ந்தவர் என்று அறிந்து வைத்திருப்பர்.
4. ஒரு பொதுப் பண்பாட்டைக் கொண்டிருப்பர்.
5. அம்மக்கள் வாழும் இடத்தாலும் பின்பற்றும் பண்பாட்டாலும் ஒற்றுமையுடனும், கூட்டுறவுடனும் இருப்பர்.
6. சமூகத்தின் பலவேறு பணிகள் தடையின்றியும் மோதல் இன்றியும் நிகழ வாய்ப்பாகக் குடும்பம், கல்வி, பொருளாதரம், அரசியல், சமயம், பொழுதுபோக்கு ஆகியவற்றைச் சார்ந்த குழுக்கள் அமைத்து, குடியிருப்பர்.
7. ஒவ்வொரு சமூகமும் தனக்கென்ற பண்பாட்டுடனும், எல்லைகளுடனும் அமைந்து வேறு சமூகத்திலிருந்து பிரித்துக் காட்டும் பண்பாட்டுடன் தனி அலகாக விளங்கும்.

## 4.1 அர்னால்டு கிரீன் கொள்கை

அர்னால்டு கிரீன் ஒரு வட்டாரத்தில் ஒரு பொது வாழ்க்கை நெறியைப் பின்பற்றிக் கூட்டாக வாழும் மக்கள் தொகுதியைச் சமுதாயம் என்று அழைப்பார். மெக் ஈவர் எனும் சமூகவியல்

அறிஞர் சமுதாயத்தின் அடிப்படைகளாகக் குறிப்பன கருதத்தக்கது. அவை பின்வருமாறு:*

1. இடம் (Locality).
2. சமுதாய உணர்வு (Community sentiment).
3. சார்புணர்வு (Dependency feeling)

## 4.2 இராபர்ட் பியர்ஸ்டெட் கொள்கை

இராபர்ட் பியர்ஸ்டெட் எனும் அறிஞர் ஒரு சமூகத்தில் உயிர்ப்பான பண்பாடு பற்றி விளக்குவார். பண்பாடு என்பது சிந்தனை (Thinking), செயலாக்கம் (Doing), உடைமை (Having) என்ற மூன்றைச் சார்ந்திருக்கும்

சிந்தனையின் அடித்தளம் எண்ணங்கள் (Ideas). செயலாக்கத்தின் அடித்தளம் நெறிகள் (Norms). உடைமையின் அடித்தளம் பொருள்கள். இவற்றைச் சற்றே விளக்கமாகப் பார்ப்போம்.

### 4.2.1. எண்ணங்கள் (Ideas)

சிந்தனையின் விளைவாகத் தோன்றும் எண்ணங்கள் சமூகத்துக்குச் சமூகம் மாறுபடும். அதன் விளைவாகப் பழக்க வழக்கமும் பண்பாடும் மாறுபடும். சான்றாக எல்லாம் கடவுள் பார்த்துக் கொள்வார் என்பது தமிழரின் எண்ணப்போக்கு. இப்படி எண்ணி தானாகச் செயல்படாமல் முடங்கிவிடுவது அன்னோர் இயல்பு. தமிழர் சிந்தனை இவ்வாறு இருக்கக் கிரேக்கச் சிந்தனை இதற்கு நேர் மாறானது. கடவுளை நம்பிய பண்டைய கிரேக்கர் கடவுள் எல்லாம் பார்த்துக் கொள்ளுவார் என்று நம்பி வாளா இருப்பது இல்லை. இப்படியே மந்திரத்தால் எல்லாம் செய்யலாம் என்று நம்புவதை ஒட்டியும், நம்பாததை ஒட்டியும் பண்பாடுகள் சமூகத்துச் சமூகம் மாறுபடுகின்றன.

### 4.2.2 நெறிகள்

ஒருவன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் எனும் நடத்தை விதிகள் சமூகத்தில் நடமாடுகின்றன. இந்த நடத்தை விதிகளே

* சமூகவியல், ப. 76.

நெறிகள் எனப்படும் இந்நெறிகள் இன்னவற்றைச் செய்தல் வேண்டும் என்றும், இன்னவற்றைச் செய்தல் கூடாது என்றும் BÚYûLVÔL @ûU¡u\] .BWÔToh ©Fv ùPh (Robert Bierstedt) நெறிகளைப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்குவார்.

## அ. நாட்டவர் வழக்குகள் (Folk ways)

சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுவாய் அமைகிற தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றுகிற வழிகள் நாட்டவர் வழக்குகள் எனப்படும். திருமணத்தில் தமிழ்ப் பெண்களுக்குத் தாலிகட்டுவது வழக்கமாக உள்ளது. அவர்களுடைய சேலை உடை, நெற்றிப் பொட்டு, நீளமாகக் கூந்தல் வளர்ப்பு, காதில் கம்மல், கையில் வளையல்கள் முதலாயின தமிழ் நாட்டவர் வழக்குகளாக உள்ளன. காலப்போக்கில் இவ்வழக்குகள் கைவிடப்படலாம். சான்றாக மூக்குக் குத்திக் கொள்ளுதல் கைவிடப்படுகிறது. நெற்றியில் பொட்டு இடுதல் கைவிடப்படுகிறது. தலைமுடியைக் கூட்டி முடிக்காமல், சடைபின்னாமல் விரித்துப் போடுவது பழக்கமாகி விடுகிறது,

## 4.2.3 ஆ. அறப்பாடுகள் (Mores)

ஒரு சமூகம் கட்டாயம் கடைபிடிக்க வேண்டியவை வேண்டாதவை என்று வற்புறுத்தப்படுவன அறப்பாடுகள் எனப்பெறும். இவற்றைக் கடைபிடிக்க வேண்டுமா? வேண்டாமா? என்ற பேச்சுக்கே இடமில்லை. தமிழ்ச் சமூகத்தில் ஆடை அணிவது கட்டாயம். தெருவில் முத்தமிடக் கூடாது என்பது கட்டாயம். இவையும் சமூகத்துக்குச் சமூகம் மாறுபடும். இவை ஏற்கத் தக்கவை எனவும், எற்கத் தகாதவை (Taboos) எனவும் பகுத்து விளக்கப்படும். தெருவில் முத்தம் இடுவது தமிழர் சமூகத்தில் ஏற்கத் தகாதது. பிச்சை எடுப்பது தமிழர் சமூகத்தில் ஏற்கத்தக்கது. ஐரோப்பியச் சமூகத்தில் ஏற்கத்தகாதது.

## 4.2.4 இ. சட்டங்கள் (Laws)

நாட்டவர் வழக்குகளும் அறப்பாடுகளும் பழைய சமூகங்களிலும், பழங்குடி சமூகங்களிலும், பிற சமூகங்களிலும்

இருக்கும். ஆனால் சட்டம் என்ற அமைப்பு எல்லாச் சமூகத்திலும் இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அரசு எனும் நிறுவனம் இருக்கும் சமூகத்தில் மட்டுமே இருக்கும். ஆங்கிலேயரால் சட்டங்களை நிறைவேற்ற சட்டமன்றமும் (Legislature), அதனை நடைமுறைப்படுத்த நிருவாக அமைப்பும் (Executive), உரிய ஐயங்கள் வரும்போது விளக்க நீதித்துறை அமைப்பும் (Judiciary) அமைக்கப்பட்டன. இங்கிலாந்தைப் பார்த்து நகல் செய்யப்பட்ட நம் இந்திய அரசியல் சாசனமும் இந்த மூன்று அடிப்படையையே கொண்டிருக்கிறது.

## 4.3 விழுமங்கள் (Social values)

முன்னே குறிக்கப்பட்ட நெறிகள் உயர்ந்த விழுமங்களை அடியொற்றி ஒரு சமூகத்தில் அமைக்கப்பட்டிருந்தால் அது சமூகத்தை வளர்க்கும். எந்தச் சமூகம் உயர்ந்த விழுமங்களைப் பின்பற்றுகிறதோ அதற்குத்தக அது உயர்ந்திருக்கும். சான்றாக சுவட்சர்லாந்து சமூகத்துக்கு நாணயமும் காலமும் உயர்ந்த விழுமங்கள். ஜெர்மானியர் எதிலும் நேர்த்தி (perfection) பார்க்கிறவர். ஆங்கிலேயர் என்ன ஆனாலும் சரி (risk) எனச் செயல்படுகிறவர். ஆக ஒவ்வொரு சமூகமும் தாம் கொண்டிருக்கும் விழுமங்களுக்குத் தக உயர்ந்திருக்கிறது. அல்லது தாழ்ந்திருக்கிறது.

## 4.4 உடைமை (Having)

மூன்றாவது கூறான பண்பாட்டைத் தீர்மானிக்கும் உடைமை மிக முதன்மையானது. இதற்கு அடிப்படையாக ஆக்கப் பொருள்கள் அமைகின்றன. இவற்றைச் சார்ந்துவரும் போக்கு பொருள் சார் பண்பாடு (material culture) எனப் பெறுகிறது. இன்றைய மக்கள் பண்பாடு, பொருள்சார் பண்பாடாகவே அமைந்துள்ளது. மனம் சார் பண்பாடும் முதன்மையானது; பெற்றோர்கள் வழி தலைமுறை தலைமுறையாக வருவது. நாம் நினைப்பதுபோல பண்பாடு மாறாதது அன்று. அரசியல் பொருளியல் போக்கிற்கு ஏற்ப அது மாறும். பிச்சை ஏற்பதும் இடுவதும் நம் முன்னைய சமுதாயம் ஏற்றுக்கொண்டிருந்தவை. தற்போது இது தவறு என்று நம் தலைமுறை நினைக்கிறது.

## 4.5 தகுதிப்பாடு (Status)

ஒரு சமூகம் அதில் உறுப்பாகி உள்ள ஒருவரின் படி நிலையைக் குறிப்பிட்ட காரணிகளால் மதிப்பிடுகிறது. அவை கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட காரணிகளாகவும் கட்டுப்பாட்டிற்கு உட்படாத காரணிகளாகவும் அமைக்கின்றன. சான்றாக ஒருவன் பிறந்த குடி, ஆண் பெண் என்ற பால் வேறுபாடு, வயது, அவனுடைய நிறம், உடலமைப்பு ஆகியவற்றை அவனால் மாற்றவும் முடியாது, திருத்தவும் முடியாது. எனவே இவை ஒருவன் கட்டுப்பாட்டுக்கு உட்படாத காரணிகள். மாறாக ஒருவன் சேர்க்கின்ற செல்வம், தொழில், கல்வி, நட்பு, சமயச் சார்பு முதலாயின அவனுடைய கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை. அவற்றை அவன் தன் முயற்சிகளால் மாற்றி அமைக்க முடியும். இவற்றைச் சமூகவியல் அறிஞர்கள் அடைந்த தகுதி (ascribed status) என்றும், அடையத்தகும் தகுதி (achieved status) என்றும் அறிவிக்கின்றனர். சான்றாக நம்மிடையே அமைந்துள்ள சாதி அமைப்பு ஒருவனின் முயற்சியால் வருவதில்லை. முன்பே அமைந்துவிட்டது. இது ஒரு மூடப்பட்ட அமைப்பாகும் (closed system). ஆனால் தன் பொறுப்பில்லாமல் தானாக அமைந்துவிட்ட தகுதியை அடையத்தகும் தகுதியில் இருந்து எய்துவதன் மூலம் தனி மனிதனோ சமுதாயமோ உயர முடியும். சான்றாக மகாத்மா காந்தி அழகற்றவர். ஆனால் தம் வேறு பல தகுதிகளால் புதிய தகுதியைப் பெற்றுக் காட்டினார். எரிமலைகள் நிறைந்த சமவெளிப்பரப்பு குறைந்த நிலப்பரப்பில் வாழ்பவர்கள் சப்பானியர்கள். இவை முன்பே அமைந்துவிட்டவை. குள்ளத் தோற்றமும், சப்பை மூக்கும், செழித்த இமைமுடி இல்லாத கண்களும் சப்பானியர் மாற்ற முடியாதவை. ஆனால் தம் உழைப்பால் தொழில்களால் தம் தகுதிகளைப் பெருக்கிக் கொண்டனர். சாதனையாளர்களாக மதிக்கப்பெறுகின்றனர்.

### 4.6 நிறுவனங்கள் (Institutions)

நாட்டவர் வழக்குகள், அறப்பாடுகள், சட்டங்கள் ஆகியவனவற்றைச் சார்ந்து அமைந்த அமைப்பே நிறுவனம் எனப் பெறுகிறது. இல்வாழ்க்கை, கல்வி, உற்பத்தி, ஆட்சி, வழிபாடு, பொழுதுபோக்கு முதலியவற்றுடன் மிகத் தொடர்புடைய குடும்பம், திருமணம், கல்வி, பொருளாதாரம், அரசியல், சமயம் ஆகியன நிறுவனங்களாக அமைசின்றன.

# 5

# திருமணம்

## 5.1 இயற்கை உந்துதல்கள்

உயிர்கள் அனைத்துக்கும் தாமாக உந்தப்பெறும் இயற்கை உந்துதல்கள் (Instincts/Impulses/Drives) உள்ளன. அவை இயல்பு ஊக்கங்கள் எனப்பெறும். பசி, தாகம், சிறுநீர், மலக்கழிப்பு முதலாயின. பசி, தாகம் போலவே உயிர்களுக்குக் காம வேட்கையும் இயல்பாக அமைந்துள்ளது. இவ்வேட்கை சின்ன வயதில் இருப்பதில்லை. வளர்ந்தபிறகே இருப்பதாகக் கருதப்பட்டது; பரப்பப்பட்டது. குழந்தைப் பருவம் முதலே காமவேட்கை மனித உயிர்களுக்கு உண்டு என்றும் அது அழுத்தப்பெற்றும் மறைக்கப்பெற்றும் பலவேறு வகைகளில் மடைமாற்றம் செய்யப் பெறுகிறது என்றும் உளவியல் அறிஞர் சிக்மன் ஃபிராய்டு தம் கட்டுரைகள் வழியும் நூல்கள் வழியும் நிலைநிறுத்தினார் சமூகவியல் பார்வைப்படி சமூகம் தொடர்வதற்கான இனப் பெருக்கத்திற்குக் காமவேட்க்கை எனும் இயல்பு உந்தலே அடிப்படையாக இருக்கிறது.

### 5.1.1 இயல்பூக்கங்கள்

உயிர்களின் இயல்பு ஊக்கங்கள் தத்தம் விருப்பம் போல் அமைகின்றன. பசித்தால் காத்திருப்பதில்லை. இன்னொருவரின் உடைமை என்றும் உயிரினங்கள் பார்ப்பதில்லை. அடித்துப் பிடித்து வேட்டையாடி உண்கின்றன. எப்படி உண்ண வேண்டும்? எங்கு உண்ண வேண்டும் என்ற வரையறையும் அவற்றுக்குக் கிடையாது. தாகம் எடுக்கும் போதும் சிறுநீர் கழிக்க விரும்பும் போதும் மலம் கழிக்க விரும்பும் போதும் அவை தம் இச்சை

போலச் செயல்படுகின்றன. கண்டகண்ட இடங்களில் நீரைக் குடிக்கின்றன. சிறுநீரையும் மலத்தையும் கழிக்கின்றன. தம் காம வேட்கையை நிறைவேற்றுவதில் அவை தடையின்றிச் செயல்படுகின்றன. பெரும்பாலும் பெண்ணுக்கு முன்னுரிமை அளித்துச் செயல்படுகின்றன. மனிதனும் தன் ஆதிப் பருவத்தில் தனக்கு ஏற்படும் இயற்கை உந்துதல்களை விலங்குகளைப் போலத் தன் இச்சைப்படியே செய்திருத்தல் வேண்டும். மனித சமூகம் என்று அமையும்போது மனிதனின் இயற்கை உந்துதல்களைத் தீர்க்கும் முறையும் நெறிப்படுத்தப்படுகின்றது. கண்ட கண்ட நேரத்தில் கண்ட கண்ட இடத்தில் அவன் தன் இயற்கை உந்துதல்களை நிறைவேற்றிக்கொள்ள முடியாது. பசி, தாகம் முதலான இயற்கை உந்துதல்கள் அவற்றைத் தீர்க்கும் முறை ஒவ்வொரு தனித்தனி உயிருக்கும் நலம் பயக்கின்றது. இவற்றுள் காம வேட்கை மட்டும் ஒருவர் இன்னொருவரைச் சார்ந்தே நிகழுவது. ஆணும் பெண்ணுமாக நிகழ்த்துவது இதன் அடிப்படையிலேயே இன்னொருவரைச் சார்ந்து வாழும் சமூக இயல்பு கட்டாயமாக அமைந்துகிடக்கிறது. அனைத்தினும் மேலாக, சமூகத் தொடர்ச்சிக்கான இனப் பெருக்கத்திற்கு இதுவே அடிப்படையாக விளங்குகிறது.

### 5.1.2 பாலுறவு வேட்கை இயற்கையின் அழைப்பு

ஆண், பெண் உறவு இழிவானது; கெட்டது; பாவம் எனும் கருத்து சில மதங்களின் வழி பரப்பப்பட்டது. சில மதங்கள் இவ்வுறவையே கடிந்து துறவே உயர்ந்தது என்றும் போற்றின. தமிழரிடையேயும் இக்கருத்துகள் பரப்பப்பட்டன. தமிழரின் ஆதி வாழ்க்கையையும் பண்டைய அகப்பாக்களையும் நோக்கும்போது சமூகத்திற்கு அடித்தளமான ஆண் பெண் உறவு பாவம் எனும் கருத்தினர் அல்லர் தமிழர் என்பது புலப்படுகிறது. பெண்ணைப் பின்னிறுத்திப் பாவப் பிறப்பு எனப் பழித்து, துறவைப் போற்றும் கருத்து தமிழரிடையே சைன பௌத்த சமயங்கள் பரவியபோது பரவியது ஆதல் வேண்டும். மிகுந்த ஆற்றல் வாய்ந்த காம வேட்கையை அடக்குவதனாலும் தடை செய்வதனாலும் அது அழிந்துவிடுவதில்லை எனவும் உள்ளத்தின் அடித்தளத்தில் மறைந்துகிடந்து பல்வேறு மனநோய்களை உண்டாக்குகிறது என்றும் உளவியல் அறிஞர்கள் கண்டறிந்தனர்.

## 5.2 திருமணத்திற்கான காரணங்கள்

திருமணம் என்பது வேறு பல காரணங்களுக்காகவும் நிகழுகிறது. பாலின ஊக்கம் மட்டுமன்றி, மக ஊக்கம், தனது பெயரையும் பொருளையும் விட்டுச்செல்லும் நோக்கம், பொருளாதாரப் பாதுகாப்பு, மூப்பு எய்தும் தருணத்தில் உதவியும் தோழமையும் வேண்டும் எனும் விருப்பம், வாழ்க்கையில் நிகழும் இன்ப துன்பங்களையும், வெற்றி தோல்விகளையும் பகிர்ந்து கொள்ள ஒரு துணை வேண்டும் என்ற எண்ணம் ஆகியன திருமணத்திற்குக் காரணங்களாக இருக்கின்றன.

திருமணம், குடும்பம், குழந்தைப்பேறு, குழந்தையை வளர்த்து ஆளாக்குதல் என்பன ஐரோப்பிய அமெரிக்கச் சமுதாயத்தில் சிதைந்து வருகின்றன என்பர். திருமணம் செய்து கொள்ளாமலே ஆணும் பெண்ணுமாக வாழுவது, பிரிவது, குழந்தை பெற்றுக் கொள்ளுவது ஐரோப்பிய-அமெரிக்க நாடுகளில் நடைமுறைக்கு வரத்தொடங்கிவிட்டது. பிரஞ்சுத் தத்துவ அறிஞர் ஜான் பால் சார்த்ரு திருமணமற்ற வாழ்க்கையை அறிவுறுத்தினார். இறக்கும் வரை பெண்ணைத் திருமணம் செய்யாமலேயே ஒரு பெண்ணுடன் வாழ்ந்தார். திருமணக் காலத்தைத் தள்ளிப்போடுதலும் தவிர்த்தலும் ஆகியன மெல்ல மெல்ல தமிழ்நாட்டிலும் நுழையத் தொடங்கிவிட்டன. இது இயல்பான பரிணாமமா? ஐரோப்பிய அமெரிக்க உலகமயமாக்கல் வழிநிகழும் இறக்குமதிப் பண்பாடா? என்பனவற்றைத் தனியே ஆராய்தல் வேண்டும்.

## 5.3 பண்டைய இயற்கை வாழ்வு

ஆண் பறவையுடன் சேர்ந்து கூடிக் கலந்து முட்டையிட்டு, குஞ்சு பொரித்து, இரையை ஊட்டி, சிறகு வளர்ந்து வலுப்பெற்றுப் பறக்கும் வரை தாய்ப் பறவை குஞ்சோடு வாழ்கிறது; குஞ்சு பறக்கக் கற்றபின் தாயை விட்டுப் பறந்து சென்றுவிடுகிறது. தாய் என்ற உறவோ குஞ்சு என்ற உறவோ அவற்றிடையே இல்லை. ஆயிரக்கணக்கான பறவைகள் இவ்வாறுதான் வாழ்ந்தன; வாழ்கின்றன. வேறு பல உயிரினங்களின் வாழ்வும், வளர்வும் பறவையினத்தைப் போலத்தான் அமைந்துள்ளன. உறவு என்ற ஓர் அமைப்பு அவற்றிடம் இல்லை. மனித இனத்தின் பழைய வாழ்வும்

வளர்வும் பறவை வாழ்வு போன்றே ஒரு காலத்தில் இருந்தன. அக்காலத்தில், மனித இனத்திடையே உறவு என்ற ஓர் அமைப்பு உருவாகவே இல்லை. உறவு என்று அறியப்பட்ட நிலை மனித சமுதாயத்தின் முதன்மையான வளர்ச்சிக் கட்டமாகும்.

## 5.3.1 திருமணத் தோற்றம்

உணர்வு உந்தும் வழி கூடிவாழ்தல் என்ற நிலை மாறி உணர்வு ஓர் ஒழுக்கமாக ஒழுகலாறாக, திருமணம் என்ற அமைப்பின் வழி ஆக்கப் பெற்றது, மனித சமூகத்தில் மிகக் குறிப்பிடத்தக்க வளர்ச்சிக் கட்டமாகும். இதன் பின்பே உறவு முறை ஊன்றி நிலைபெறத் தொடங்கி இருத்தல் வேண்டும். யாரோடும் சேர்வது முன்பு இருந்தது. சமூகம் என்ற அமைப்பு சிறிய அளவில் கூட உருவம் கொள்ளாத காலம் அது. சமூகம் என்ற அமைப்பு சிறுக உருவான காலத்து ஒரு சிலர் ஒருசிலரோடு சேர்ந்து வாழும் போக்கு மெல்ல அரும்பியது. விரும்பியவர், தாம் விரும்பியவரோடு சேர்ந்து வாழ்ந்தனர். இந்தச் சேர்க்கை வாழ்க்கை ஓர் அமைப்பாக உருவாகும் வரை திருமணம் என்ற இன்றியமையாத சமூக அமைப்பு உருவாகவில்லை.

## 5.3.2 திருமணத்தின் தேவை

### 5.3.2.1 ஆளும் வாரிசு உரிமை

நாட்டாண்மை அல்லது ஊராளுவது உரிமையாகி தலைமுறைச் சொத்தாக ஒருசிலர் அனுபவிக்க விரும்பியபோது ஆளும் உரிமையைத் தக்கவைத்துக் கொள்வதற்காக, ஆளவந்தார் (Ruler) திருமணம் என்ற முறையை முதலில் அறிமுகப்படுத்தி யிருத்தல் வேண்டும். எனவே ஆளும் உரிமை என்ற ஒருவித ஆட்சி உடைமையைத் தனக்குள் வைத்துக்கொள்ளும் உந்து எண்ணமே திருமணம் என்ற அமைப்புக்கு அடிப்படையாயிற்று. ஆக ஆளும் வர்க்கத்தார் அல்லது அரசர் தாம், முதலில் திருமணம் என்ற அமைப்பை அறிமுகப்படுத்தினர்.

### 5.3.2.2 அனுபவிக்க வாரிசு உரிமை

எந்த உடைமையும் தேவையின்றி, இட்டம் போல அலைந்த நிலை மிகப் பழைய நிலை; பின்பு கால்நடைகள் ஆடவர்

உரிமைகள், உடைமைகள் ஆயின; அதன்பின்பு நிலம் பெண்களின் முதல் உடைமை ஆயிற்று; நிலம் உடைமை ஆன நிலையில் பெண்களுக்கு நிலத்தில் பயிர் செய்ய ஆள் துணை தேவையாயிற்று. ஆளைப் பெற்றுப் பெருக்க ஆண் உறவு நிரந்தரத் தேவையாயிற்று. அதனுடன் நிலத்தை நிரந்தர உடைமையாகக் காக்கவும் மற்றவர் இடையூற்றில் இருந்து மீட்கவும் காக்கவும் பெண்ணுக்கு ஆண்துணை நிரந்தர முதன்மையாயிற்று. இந்தக் கட்டத்திலே திருமணம் என்ற அமைப்பு உருவாயிற்று. ஆக நிலவுடைமையே திருமண அறிமுகத்திற்கு அடுத்த காரணமாயிற்று.

### 5.3.2.3 குழந்தைச் செல்வம்

நிலத்தில் பயிராக்கவும், காக்கவும் ஆண் துணை தேவையாயிற்று. ஆகவே காலப்போக்கில் ஆட்களும் ஒருவர்க்கு உடைமை எனக் கருதப்பட்டனர். அதனால்தான் மக்கட்செல்வம், குழந்தைச் செல்வம் என்ற வழக்குகள் தோன்றின. (இந்த அடிப்படையில்தான் பிற்காலத்து மாடும் செல்வமாயிற்று). தோன்றவே தனக்குத் தன்னுடைமையாகக் குழந்தைகள் வேண்டும் என்ற எண்ணத்தின் விரிவே, திருமணம் கட்டாகச் சமூகத்தில் உருப்பெற்று வலுப்பெற்றது.

## 5.4 கட்டுப்பாடற்ற பாலுறவு இருந்த காலம்

முன்பு சகோதரனும் சகோதரியும், தாயும் மகனும், தந்தையும் மகளும் என்ற வேறுபாடு இன்றி உறவு கொண்டனர். ஏனையோரிடமும் உறவுக் கட்டுப்பாடு இல்லை. கணவர் இறந்துவிட்டால் மூத்த மகனைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும் நிலவியது. பண்டைக் காலத்தில் தாய்-மகன், தந்தை-மகள், அண்ணன்-தங்கை வேறுபாடு இன்றி உறவு கொண்டனர். இப்பழக்கம் நீண்ட நெடுங்காலமாகவே இருந்து வந்தது. கட்டுப்பாடற்ற உறவு இன்று அநாகரிகமாகக் கருதப்பட்டாலும் அன்று இழிவாகக் கருதப்படவில்லை. விலங்கினங்களைப் பார்த்தும், பழகியும் உடனுறைந்து வாழ்ந்த மாந்தரினம் அவற்றைப் போலவே உறவிலும் கலந்து வாழ்ந்தது. பகுத்தறிவு இல்லாத காலக்கட்டத்தில் மனித இனம் அவ்வாறு வாழ்ந்திருக்க வேண்டும். மேற்கண்ட பழக்கம் குறையத்

தொடங்குவதற்குப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் ஆகி இருக்க வேண்டும். இவ்வாறு அப்பா, அக்கா, தங்கை, அண்ணன், தம்பி, தாய் இவர்களிடையே கொண்ட உறவு நாளுக்கு நாள் குறையத் தலைப்பட்டது. இவர்கள் இரத்த உறவுடைய பந்தம் என்று மனித இனம் உணரவும், உறவுப் பந்த வெறுப்பு ஏற்படவும், சற்று நாகரிகக் காலக் கட்டத்தில் தலைப்பட்டிருத்தல் வேண்டும். இத்தகைய வெறுப்பு வளர்ந்தது. வெறுப்பின் வளர்ச்சியால் இரத்த உறவுடையோர் மாட்டுள்ள உறவு தவிர்க்கப்படலாயிற்று. தாயும் மகனும், தந்தையும் மகளும் உறவு கொள்வது குறையலாயிற்று.

தொல்பழங்காலத்தில் வரன்முறையற்ற உறவு இருந்திருக்கலாம் என்பதற்கு நேர்முகமான சான்று எதுவும் இல்லை. ஆனால் மனித இனத்தில் இன்றும் காணப்படும் சில உடலுறவு வழக்கங்களும், அநாகரிக நிலையில் வாழும் ஒரு சில பழங்குடி மக்களின் உடலுறவுப் பழக்கங்களும் ஒரு காலத்தில் வரன்முறையற்ற உடலுறவு இருந்திருக்கும் என்று உய்த்துணர வைக்கின்றன. அவையாவன:

1. ஊர்க்கோயில் விழாக்கள் நிகழும் போது எந்தப் பெண்ணும் எந்த ஆடவனோடும் உறவாடலாம் என்ற பழக்கம் இருந்து வந்திருக்கிறது. கிரேக்க, ரோம, அசீரிய மக்களிடம் விழாக் காலங்களில் வரன்முறையின்றி வழிபாட்டுத் தலத்தில் யார் யாருடனும் உறவாட அனுமதிக்கப்பட்டிருந்தனர். தமிழ்நாட்டிலும் இத்தகு பழக்கம் இருந்ததைப் பின்வரும் நிகழ்ச்சி காட்டுகின்றது. நெருப்பூர் என்ற ஊர் தருமபுரி மாவட்டத்தில் உள்ளது. இவ்வூரில் நெருப்புவிழா மூன்று நாள்களுக்குக் கொண்டாடப்படுகின்றது. இந்நாட்களில் இளைஞர்கள் அங்கே உள்ள குன்றின்மீது ஏறுவர். போட்டி போட்டுக் கொண்டு ஆண் பெண் உடலுறவுப் பாடல்களைப் பாடுவர். அந்த மூன்று நாட்களில் எந்தப் பெண்ணும் எந்த ஆணுடனும் உடலுறவு கொள்ளலாம்.

2. விருந்தினர்கள் வரும்போது அவர்கள் மனத்தை நிறைவுபடுத்த மனைவியோ கணவனோ வந்த விருந்தினருடன் உடலுறவாட அனுமதிப்பதுண்டு. எஸ்கிமோக்களிடம் இப்பழக்கம் இன்றும் உள்ளது. வேறுசில ஆப்பிரிக்கப் பழங்குடி மக்களிடம்

இப்பழக்கம் வழக்கத்தில் இருந்தது. தன் மனைவியை வந்த சிவனடியார்க்கு வழங்கிய நிகழ்ச்சியை இயற்பகை நாயனார் வரலாற்றின் மூலம் பெரியபுராணம் காட்டுகிறது. மத்திய இந்தியாவில் வாழும் கோ (Ho) போன்ற பழங்குடிகளிடம் இத்தகு பழக்கம் இருந்திருக்கிறது.

3. ட்ரோப்ரியாண்ட் (Dropreyond) தீவு மக்களிடமும் ஆஸ்திரேலியாவின் மையத்தில் வாழும் பழங்குடிகளிடமும் தந்தை யார் என்று தெரியாத போக்கு உள்ளது. மேற்கு ஆப்பிரிக்காவில் வாழும் செரேர் என்ற இனக்குழு மக்களிடமும் தென் கேரளம், தென் கன்னடம், தென் தமிழ்நாடு வாழ் மருமக்கள்வழி இன மக்களிடமும் தாய்ப் பெயரைத் (தந்தைப் பெயரைத் தவிர்த்து) தன் குழந்தைகளின் பெயர்களுக்கு முன்னால் (Initial) இடும் வழக்கம் உள்ளது. சீனர்களிடமும் தந்தைப் பெயர் தெரியாமல் தாய்ப்பெயர் மட்டுமே தெரிந்த நிலை இருந்ததாம்.

4. சில பழங்குடிகளிடம் வயதில் முதிர்ந்த அனைவரையும் அப்பா, அம்மா என்று அழைக்கும் பழக்கம் உள்ளது. தம்மோடு வயது ஒத்தவர்களைக் கணவன் மனைவி என்று முறையிட்டு வழங்கும் போக்கு அன்னாரிடம் காணப்படுகிறது. குழந்தைகளை அவை யாருடையவாக இருந்தாலும் தன் மகன் என்றும் தன் மகள் என்றும் அழைக்கும் பழக்கம் உள்ளது. தமிழில் உள்ள 'அம்பல்' (அம்பலம்) என்ற சொற்கள் நோக்கத்தக்கன. காதல் வெளிப்படுதலை 'அம்பல்' என்ற சொல் குறிப்பதும், அம்பல் + அம் = அம்பலம் கோயிலைச் சுட்டுவதும் ஊன்றி நோக்கத் தக்கன. கோயில் 'பொது இல்' என்று அழைக்கப்பட்டது. அங்கிருந்த தேவரடியார், பொது மகளிர் என்றழைக்கப் பட்டனர். சமய குரவராகிய சுந்தரர், பரவை என்ற தேவரடியாரை மணந்து கொண்டதும் எண்ணத்தக்கது. அம்பலத்தில் (கோயிலில்) பலரறியத் தெரிந்து விட்டது என்ற கருத்திலேயே 'அம்பலம் ஆகிவிட்டது' என்ற வழக்குத் தோன்றியிருத்தல் வேண்டும்.

மேற்கண்ட சான்றுகள் வரன்முறையற்ற உறவு மனித இனத்திடையே ஒரு காலத்து இருந்தது என்பதைக் காட்டும்

பிற்கால எச்சங்கள் ஆகும். வரன்முறையற்ற காட்டுமிராண்டி நிலையிலிருந்து குழு மணமுறை உருவாயிற்று. ஒரு குழு ஆடவர் பிறிதொரு குழு பெண் கூட்டத்தை அப்படியே மணந்து கொண்டு, ஒரு குழு ஆண் அல்லது பெண் மணந்து கொண்ட மற்ற குழுவில் உள்ள எந்தப் பெண் அல்லது ஆணுடன் உறவாடலாம். இத்தகு குழு மணங்கள் இருந்ததற்கான நேர்ச்சான்று எதுவும் இல்லை. எனினும் ஆஸ்திரேலியாவில் வாழும் தயரி (Thairi), பிரேசிலில் வாழும் கைகான் (Kaighan), சைபீரியாவில் வாழும் சுக்சி (Suksi) ஆகிய பழங்குடிகளிடம் குழு மணமுறை காணப்படுகிறது. பின்னே தோன்றிய பலகணவ முறை குழுமணத்தின் தேய்வாகலாம். ஒரு பெண் இன்னொரு குடும்பத்தைச் சேர்ந்த எல்லாச் சகோதரர்களையும் மணந்து கொள்வது. இத்தகு மணமுறை பண்டைய ஸ்பார்த்தரிடமும் (Spartar) இருந்தது. எஸ்கிமோக்கள், கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள பகுமா, நீலகிரித் தோடர்கள், வட இந்தியாவில் வாழும் லடாக்கிகள், டெயராடோனில் வாழும் கோல்டர், திராவிடப் பழங்குடியினரான கோத்தர்கள், குறும்பர்கள், படகர்கள் ஆகியோரிடம் பல கணவமுறை இருந்தது. சிலரிடம் இன்றும் இருந்து வருகிறது. பாண்டவர் ஐவரை மணந்து வாழ்ந்த திரௌபதி வாழ்க்கையைத் தெய்வீக வாழ்க்கையாக நோக்கும் இந்தியப் போக்கும், பல கணவமுறை இந்தியாவில் ஒரு காலத்தில் செல்வாக்கில் இருந்ததைக் காட்டுகிறது.

குழுமணமுறை தமிழ்நாட்டிலும் ஒரு காலத்தில் செல்வாக்கில் இருந்தது என்பதை மானுட இயல் ஆய்வு தெளிவுப்படுத்துகிறது. தீர்த்தம், குந்தாணி, சின்னப்புத்தூர் ஆகிய ஊர்கள் தருமபுரி மாவட்டத்தில் உள்ளன. இவ்வூர் வாழ் மக்களின் குடும்பத்தில் இருநூற்றிற்கு மேற்பட்டவர்கள் இருக்கின்றனர்; அனைவரும் ஒரே பாத்திரத்தில் சமைத்துக் கூட்டாக உண்கின்றனர். ஒரு குடும்பத்தைச் சேர்ந்த இவர்கள் ஒரு பெரிய வீட்டில் ஒன்றாக வாழ்கின்றனர். குடும்பத்தில் யார் மூத்தவரோ அவர்தான் குடும்பத்தில் மூத்தவர், அவர்தான் குடும்பத்தை நடத்திச் செல்பவர். கால்நடை, நிலம் ஆகிய சொத்துகள் குடும்பத்திற்குப் பொதுவாகும். வரும் வருமானத்தை அனைவரும் பங்கிட்டுக்கொள்கின்றனர். எல்லோரும் அவரவருக்குத் தனித்தனியே கடமைகளை ஒதுக்கிக்கொண்டு செயலாற்றுகின்றனர். திராவிடப் பழங்குடி மக்கள் வாழ் இடங்களில் இடம்பெற்றுள்ள

ஊர்ப்பொதுக் குடிசைகள் பழைய குழுமணத்தின் எச்சமாக இருக்கலாம், அந்தமானில் உள்ள 'ஓங்கி' மக்கள் பொதுக் குடிசை அமைத்து வாழுகின்றனர். இப்பொதுக் குடிசை முறையின் மறுவடிவமே தமிழ்நாட்டுச் சிற்றூர் மக்கள் அமைத்த பொதுவில், கோயில் என அமைந்தன ஆகலாம். ஆகக் குழு மணமுறை மிகப் பழைய முறையாக அமைந்து காலப்போக்கில் பல கணவ முறையாகவும், பின்னர் பல மனைவி முறையாகவும் அதன் பின்னர் ஒருவன் ஒருத்தி மணமுறையாகவும் வளர்ந்திருக்கலாம்.

இருநூற்றைம்பது சமூகக் குழுக்களை ஆராய்ந்த அறிஞர் மர்டோக் (Murdock) 195 சமூகக் குழுக்கள் பலரை மணம் செய்து கொள்வன என்றும், 43 சமூகக் குழுக்கள் ஒருவன் ஒருத்தி திருமண அமைப்புடையன என்றும் குறிப்பிடுகிறார். பலரை மணந்து கொள்ளல் மிகுதியாக இருந்தது என்பது இதனால் தெளிவாகிறது. இவ்வமைப்பைக் குழுமணத்தின் பிற்கால மாற்றம் எனலாம்.

வரன்முறையற்ற ஒழுக்கம், குழுமணம், பலகணவமணம், பல மனைவிமணம், ஒருவன் ஒருத்தி மணம் என்ற வரிசையைச் சில மானுட இயல் அறிஞர்கள் மறுக்கின்றனர். பாஸ்கல் கிஸ்பர்ட், மசும்தார், மதன், வெஸ்டர்மார்க், மலியனோஸ்கி ஆகியோர் இக்கருத்தினர். அதற்கு அவர்கள் காட்டும் தடைகள்:

1. மிகவும் பழங்குடிகள் என்று கருதப்படுகின்ற பிக்மிகள், தென் ஆஸ்திரேலியப் பழங்குடிகள் ஆகியோரிடம் வரன்முறையற்ற உடல் உறவு அனுமதிக்கப்படுவதே இல்லை. தென்னிந்தியப் பழங்குடிகள் எவரிடமும் வரன்முறையற்ற உடலுறவு இருந்ததாகத் தெரியவில்லை. மலைப் பண்டாரம், காடர், பளியர், மன்னான், காணிக்காரன் ஆகியோரிடம் இத்தகு பழக்கம் இல்லை. திருமணமாகாத இளம்பெண்டிரை முதிய பெண்டிரின் மேற்பார்வையில் பார்த்துக்கொள்ளும் வழக்கம் உள்ளது. மிக அநாகரிக நிலையில் வாழும் அந்தமான் பழங்குடிகளிடம் கூட வரன்முறையற்ற ஒழுக்க உறவு இல்லை. எனினும் திருமணத்திற்கு முன்பு தாராளமாக இளம் ஆணும் பெண்ணும் நெருங்கிப் பழகுவதையும் உடலுறவு கொள்வதையும் கூடப் பல பழங்குடிகள் அனுமதித்திருக்கின்றன. ஊரிலுள்ள இளம் ஆணும், பெண்ணும் இரவில் கட்டித் தழுவிக்கிடப்பதைக் கோண்டு மக்களிடம்

காணப்படும் 'கோட்டுல்' முறை காட்டுகிறது. இத்தகு முறை பல பழங்குடி மக்களிடம் காணப்படுகிறது. கென்யா வாழ் 'கிகியூ' இனக்குழுவிடம் புணர்ச்சி தவிர்க்கப்படினும், மணமாகா ஆடவர் பெண்டிர் தழுவி இன்புறுதல் தடுக்கப்படுதல் இல்லை. சில பழங்குடிகளில் (Khasa) பெற்றோர் வீட்டில் மகளாக இருக்கும் வரை, யாருடனும் உடலுறவு கொள்ளலாம். திருமணம் ஆனபின்பு கூட மனைவி என்ற அளவில் கணவன் ஊரில் கணவனோடு வாழ வேண்டும்; பிறந்தகம் திரும்பும் போது பழைய காதலரோடோ அல்லது புதிய காதலரோடோ உடலுறவு கொள்வது அனுமதிக்கப்பட்டிருந்தது. இந்தக் காரணத்திற்காகவே அந்தப் பெண்கள் பிறந்த பிணைப்பை விட்டுவிடாமல் தக்கவைத்துக் கொண்டிருப்பார்களாம். எனவே வரன்முறையற்ற உடலுறவுப் பழக்கம் பண்டு இருந்து, மனிதரின் நினைப்பும் செயலும் செம்மையுறச் செம்மையுற ஒருவன் ஒருத்தி என்ற கோட்பாடு உருப்பெற்றது எனலாம். திருமணம் என்ற அமைப்புதான் உறவுக்கும் உறவுப் பெயருக்கும் அரும்பெரும் அடிப்படையாகும். திருமணமின்றேல் உறவுமில்லை; உறவுப் பெயருமில்லை.

## 5.5 தாய்த் தலைமை

தொடக்க காலத்தில் தாய்த் தலைமையே இருந்திருக்க வேண்டும். தாய் வழிச் சமூக அமைப்பே தந்தை வழிச் சமூக அமைப்பைவிடத் தொன்மையானது. அதுவே இயல்பானது. குழுமண முறையிலிருந்து பிறந்த பல கணவ முறையில் பெண்ணே தலைமை பெற்றிருந்தாள். சில இனங்களில் தந்தையின் பெயரே அறியப்படாமல் தாயை மட்டுமே அறிந்த நிலை இருந்தது. இந்தச் சூழல் தாய், மகன், மகள் என்ற உறவின் தொன்மையைக் காட்டுகிறது. தாய் - மக்கள் உறவே தொன்மையாக இருந்திருக்கும் என்பதற்குக் காரணங்கள் :

1. தாயே குழந்தையைப் பத்து மாதங்கள் சுமக்கிறாள்.
2. தாயே குழந்தையை ஈன்றெடுக்கிறாள்.
3. தாயே குழந்தையை வளர்க்கிறாள்.

மற்றைய உயிர்களின் வளர்ப்புக் காலத்தை விட மனிதக் குழந்தையின் வளர்ப்புக் காலம் கூடுதல் ஆகும். சிலவாரங்களில்

பறவைக் குஞ்சு பறக்கக் கற்றுவிடுகிறது. சில நாள்களிலேயே மீன் குஞ்சு நீந்தக் கற்றுவிடுகிறது. ஆனால் மனிதக் குழந்தை ஓரளவு வினவுதெரிய 48 மாதங்கள் ஆகிவிடுகின்றன. இந்தக் கால இடைவெளியில் குழந்தை தாயை விட்டுப் பிரிவதில்லை. சுமப்பதிலோ ஈன்றெடுப்பதிலோ தந்தைக்கு எதிலும் பங்கில்லை. வளர்ப்பதில் கூட அவருக்குச் சிறு பங்கு கூட ஆதிகாலத்தில் இருந்திருக்குமோ என்பது ஐயமே. பல ஆணுடன் புணர்ந்து கருவுற நேர்ந்த அந்தக் காலத்துப் பெண்ணுக்கு, ஏதேனும் குறிப்பிட்ட ஆண் அருகிலிருந்து உதவுவதற்கு வாய்ப்பு மிகக் குறைவு. இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்குத்தான், பலரை மணந்துகொண்ட நீலகிரி தோடவப் பெண்ணுக்கு வில்லும் பூக்குளியும் தரும் ஆடவன் மட்டுமே சடங்குக் கணவனாகக் கருதப்பட்டான். ஆக, தாய், மகன், மகள் என்ற உறவே மூத்தது. தந்தை, அத்தை, மாமன் முதலான உறவுகள் குழுமணத்தில் மெல்லத் தொடங்கி ஒருவன் ஒருத்தி மண அமைப்பில் விரிவுபெற்று நிலைபெற்றிருக்க வேண்டும். ஆக, சமூகம் என்ற பேரமைப்பின் அடித்தளம் குடும்பம், குடும்பம்; என்பதின் அடித்தளம் திருமணம்; உறவு அல்லது உறவுப் பெயர் மூலத்தளம் திருமணம் என அறியலாம்.

## 5.6 காமஞ்சாலா இளமை மணம்

பெற்றோர்கள் தம் குழந்தைகளின் சிறு பருவத்தில் மணவினை முடித்தல் உண்டு. இதனை இலக்கியங்கள், நாட்டுப்புறச் செய்திகள், பழங்குடி மக்கள் வாழ்க்கை ஆகியனவழி அறியலாம். குழந்தை மணம், பெற்றோர் செய்து வைத்தலே பெரு வழக்கு. அன்றியும் காமஞ்சாலா இளமையோள்வயின் காதல் அரும்புதலும் உண்டு. பூப்புப் பருவம் நோக்கி நிற்கும் சிறுமியை நோக்கிய காதல், அருகிய வழக்காக இருந்துள்ளது. கலித்தொகை 122ஆம் பாடலுக்குக் கூற்றுக் குறிப்பு எழுதும் நச்சினார்க்கினியர்,

> 'காமஞ்சாலா இளமையோள் வயின், களவொழுக்கம்
> ஒழுகிய தலைவன்'

என்று எழுதுவர்.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேல் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே"

என்ற பாடல் கி.பி. பத்தாம் நூற்றாண்டினதாக யாப்பருங்கலக் காரிகையில் காட்டப்பெறுகிறது.

இளைஞன் ஒருவன் சிறுமியைக் காதலித்தான். அவளோ பருவம் எய்தினாள் இல்லை. எனவே அவள் பருவம் எய்தும் நாளை எதிர்நோக்கி ஆவலுடன் காத்திருந்தான். ஒரு நாள் அவள் பருவம் எய்தினாள் என்ற செய்தி கேட்டு மகிழ்ந்து 'என் காதலி பருவம் ஆகி விட்டாள்! என் காதலி பருவம் ஆகிவிட்டாள்! மலையமானின் ஒளி படைத்த வேலைப் போன்ற கூரிய விழியைப் பெற்ற என் காதலி பருவம் ஆகிவிட்டாள். அவளுக்கு இன்னமும் முலைகள் வரவில்லை. ஆயினும் பருவம் அடைந்துவிட்டாள்' என்று துடிப்புற மொழிந்தான் எனும் சூழலில் முற்கூறிய பாடலை உணர்ந்தால் பருவம் எய்துவதற்கு முன்னும் களவொழுக்கம் இருந்தமை தெளிவாகும்.

கண்ணகிக்குத் திருமண வயது பன்னிரண்டு என்று இளங்கோ குறிப்பர். சீதைக்கு மணம் முடியும்போது ஆறுவயது என்பர். திலகவதியாருக்கு மணம் பேசும்போது ஆண்டு ஆறிரண்டு என்பர் சேக்கிழார். ஞானசம்பந்தருக்கு நியமிக்கப்பெற்ற பூம்பாவைக்குத் திருமண வயது ஏழு. அவள் சிற்றில் இழைத்துச் சிறுசோறு சமைத்து விளையாடிய பருவத்தில் அவள் தந்தை திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார். கௌரிக்கு எட்டு வயதில் மணம் நடந்ததாகத் திருவிளையாடற்புராணம் பேசும். வள்ளி வண்டல் புரிந்து வளரும் பருவமே முருகனைப் புல்லும் பருவம் என்று பெற்றோர் எண்ணினர். அவளுக்குத் திருமண வயது பன்னிரண்டு ஆகும்.

மெகஸ்தனீசு எனும் கிரேக்கத் தூதன், சந்திரகுப்த மௌரியன் காலத்து (கி.மு. 400) அவனது அவைக் களத்தில் இருந்தவன். அவன் தனது நூலில் தமிழகத்துப் பாண்டியரையும் கொற்கை முத்தையும் குறிப்பிடுகிறான். மேலும், பாண்டிய நாட்டில் ஆறுவயதுப் பெண்கள் கூடக் குழந்தைகள் பெறுகின்றனர் என்பது அவன் தரும் குறிப்பு.

பழஞ்சீன நாட்டில் பத்து வயது ஆனபின் மகளிரை வீட்டிற்கு வெளியே விடுதல் இல்லை. பெண்களுக்கு ஏழு வயது ஆன பின்னர் அவர்களை உடன் பிறந்த ஆண்பிள்ளைகளுடன் உறங்கவிடுவதும் இல்லை. தோடர்கள் திராவிடப் பழங்குடி மக்கள். அவர்களுக்குப் பெண் குழந்தை பிறந்த உடனேயே அக்குழந்தைக்கென ஒரு பையனை நியமித்துவிடுவர். அப்பையன் அப்பெண்ணுக்கு ஆண்டுதோறும் துணி (கையுறை) கொடுப்பான். அப்பெண் பருவம் அடைந்தவுடன் அப்பையனை மணப்பாள். பெண்டிர் பருவம் அடைவதற்கு முன்பே ஆடவன் ஒருவனுடன் உடலுறவு கொள்வதுண்டு. அவர்களது முறைப்படி ஒவ்வொரு பெண்ணுக்கும் முற்பருவ உறவு நடந்தாக வேண்டும். உறவு கொண்ட அவனே அவளை மணக்கலாம்; மணக்காமலும் போகலாம்.

மலசர் பழங்குடியினரிடம் குழந்தை மணம் உண்டு. ஆனைமலைப் புலையரிடம் பத்து வயதில் இளமணம் செய்து வைக்கும் வழக்கமுண்டு. நீலகிரித் தோதுவர் பெண்ணுக்கு மூன்று வயதுத் தொடக்கத்திலும் பையனுக்கு ஐந்து வயதுத் தொடக்கத்திலும் மணம் செய்விப்பர்.

நாட்டுப்புறப் பாடல்களும் குழந்தை மணத்தைக் கூறுகின்றன. சொத்துரிமைக்காக இது போன்ற சிறு மணம் நிகழ்வதைச் சில நாட்டுப்புறப் பாடல்கள் வழி உணர முடிகின்றது. குடும்பச் சொத்து வேறு யாருக்கும் சென்றுவிடக் கூடாது என்பதே நோக்கம். இக்கருத்து 'சின்ன நாடான் கதையில்' வருகிறது. குமாரசாமி என்ற நாடார் இளைஞனுக்குச் சின்னணைஞ்சி எனும் இரண்டு வயதே நிரம்பிய அவனுடைய அத்தை மகளைத் திருமணம் செய்து வைக்கின்றனர். அதனால் குடும்பச் சொத்து முழுவதும் அவனுக்கே வந்துவிடும். திருமணம் செய்து கொண்ட இளைஞர்கள் தாங்கள் மணம் புரிந்து கொண்ட சிறுமி பருவம் அடையும் வரை தங்கள் குலத்தைவிடத் தாழ்ந்த குலத்துப் பெண்களுடனோ, பொது மகளிரிடமோ தொடர்பு கொள்வதைச் சமுதாயம் அனுமதித்தது. மேலும் வயது வந்த பருவப் பெண்ணுக்குச் சிறுவனைத் திருமணம் செய்து வைத்தலும் நாட்டுப்புறப் பாடல்களால் அறியலாம். இந்த நிலையைக் கிரேக்க நாட்டு இலக்கியங்களும் கூறுகின்றன.

மானிடவியல் வல்லார் கண்ணகியின் பன்னீராட்டை மணத்தை முற்பருவ மாணமாகவே கொள்வர். பன்னிரு வயதில் பருவம் உறுதல் விதி விலக்கே அன்றிப் பொது வழக்கு அன்று. உடலியல் ஆய்வும் பன்னிரு வயதைப் பருவ வயதாக உடன்படுதல் இல்லை.

# 6

# குடும்பம்

## 6.1. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்

சமூக அமைப்பில் குடும்பம் என்பது மிகமிக இன்றியமையாதது ஆகும். குடும்பத்தையே ஒரு குட்டி சமூகம் என்று கூறலும் தகும். புதிது புதிதாகப் பிறக்கும் குழந்தைகளைச் சமூகமயமாக்குவது குடும்பம்தான். சமூகம் முன்பே திட்டமிட்டோ திட்டமிடாமலோ வடிவம் அமைத்திருக்கிற மனித நடத்தைகளைக் குடும்பமே புதிதாகப் பிறந்து வளரும் குழந்தைக்குக் கற்றுக் கொடுக்கிறது. கற்றுக் கொடுப்போருள் முதலாமவராகத் தாய் அமையலாம்! அவருக்கு அடுத்தபடியாக, தந்தை, பாட்டன், பாட்டி, அண்ணன், அக்காள், அதே வீட்டில் வாழ்ந்து வரும் பிற உறவினர்கள் என்போர் வழி, குழந்தையைச் சமூகமயமாக்கல் தொடருகிறது. எனவேதான் ஒரு குழந்தையின் வளர்ப்பில் அம்மாவின் பங்கு மிகப் பெரியதாகவும், ஏனையோரின் பங்கு அடுத்த நிலையிலும் அமைகின்றது. இவர்களின் பாதிப்பில் இருந்து ஒரு குழந்தை தப்பிவிட முடியாது. சமூகமயமாக்கலின் தொடக்கம் குடும்பத்திலேயே அமைகின்றது. தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் எனும் தமிழ்ப் பழமொழி சமூகவியல் நயம் வாய்ந்தது ஆகும்.

## 6.2. குடிப்பிறப்பு

குடிப்பிறப்பு என்பது குடும்பத்தின் விரிவாக்கமே ஆகும். ஒருவருடைய தகுதிப்பாடு அவர்தம் குடிப்பிறப்பைப் பொறுத்தே அமைகிறது. பிறப்பின்தன்மை, பெற்றோர்களின் பெருமை,

குடும்பத்தின் பழமை முதலாயவற்றைப் பொறுத்து ஒருவருடைய தகுதிப்பாடு தீர்மானிக்கப்பெறுகிறது. ஒருவருடைய பிறப்பு முறையாக இருந்தால் அவருக்கு மதிப்பும், பிறப்பு முறைகேடாக இருந்தால் இழிவும் கிடைக்கின்றன. பெற்றோர்கள் பெருமை உடையவராக இருந்தால், குடும்பத்தின் பழைமை குறைபாடு இல்லாமல் விளங்கினால், மதிப்பும், மாறாக இருந்தால், இழிவும் ஏற்படுகின்றன. திருவள்ளுவர் 'குடிமை' என்னும் அதிகாரத்திலும் (96), குடிசெயல்வகை (103) என்னும் அதிகாரத்திலும் குறிக்கும் செய்திகள் இங்கே இணைத்து நினைக்கத்தக்கவை. ஒருவருடைய நல்ல பண்புகளுக்கு இடையில் அன்பற்ற தன்மை காணப்பட்டால் அவரை அவருடைய குடிப்பிறப்பு பற்றி ஐயப்பட நேரும் எனும் கருத்தில்,

> **நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்**
> **குலத்தின்கண் ஐயப்படும்.** ***(குறள் 958)***

எனத் திருவள்ளுவர் கூறுகிறார்.

இன்ன நிலத்திலிருந்து முளைத்தது என்பதைச் செடி, கொடியின் முளை காட்டும். அதுபோல, குடியில் பிறந்தவரின் வாய்ச்சொல் (நடத்தை) அவருடைய குடிப்பிறப்பைக் காட்டும் எனும் கருத்தில்,

> **நிலத்தில் கிடந்தமை கால்காட்டும்; காட்டும்**
> **குலத்தில் பிறந்தார் வாய்ச்சொல்.** ***(குறள் 959)***

என்று இன்னோர் இடத்தும் சுட்டுகிறார்.

ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று சொல்லப்படுவது தான் பிறந்த குடியை ஆளும் சிறப்பைத் தனக்கு உண்டாக்கிக் கொள்வதாகும் எனும் கருத்தில் திருவள்ளுவர் குடிசெயல்வகையில்,

> **நல்லாண்மை என்பது ஒருவர்க்குத் தான்பிறந்த**
> **இல்லாண்மை ஆக்கிக் கொளல்.** ***(குறள் 1026)***

என்பர்.

ஆகக் குடும்பமும் குடியும் மனிதனைச் சமூகவயப் படுத்துவதிலும், நல்வழிப்படுத்துவதிலும் தலைமை இடம் பெறுகின்றன.

## 6.3. மனிதன் விலங்குச் சூழலில் விலங்காகிறான்

மனிதக் குழந்தையாகப் பிறந்து விழுவதாலே மனிதன் ஆகிவிடுவதில்லை. காஸ்பர் காசர் (Gasper Hauser) என்பவன் மனிதவாடையே இல்லாத காட்டில் - கள்ளக்குழந்தை என்பதால் விடப்பட்டுக் காட்டுச் சூழலிலேயே வளர்ந்தான். செர்மனியில் நியூரம்பர்க் நகருக்கு அருகே அமைந்துள்ள காட்டில் திரிந்து வாழ்ந்து கொண்டிருந்த அவனை 1828-இல், ஏறத்தாழ 17 வயதில் தற்செயலாகக் கண்டுபிடித்தனர். 17 வயது ஆகிய அவன் மூன்று வயது குழந்தை அளவுக்குக் கூட நடந்து கொள்ளவில்லை. இருகால்களால் நடக்காமல் முன்னம் கால்களைக் கைகளால் ஊன்றி விலங்குபோல் அவன் நடந்து திரிந்தான். அவனுக்குப் பேசத் தெரியவில்லை. போதிய மனவளர்ச்சியும் இல்லை. 1920-இல் உத்திரப்பிரதேச மாநிலத்தில் ஜெஎல்சிங் (Jalsingh) எனும் கிறித்தவச் சமயப் போதகர் ஓநாய்கள் வசித்துவந்த குகையில் இருந்து இரு சிறுமிகளை எதேச்சையாகக் கண்டுபிடித்தார். அச்சிறுமிகள் தோற்றத்தில் மனிதர்களாக இருந்தனரேயன்றிப் பேச்சிலும், செயலிலும் நடத்தைகளிலும் ஓநாய்களைப் போலவே இருந்தனர். கால்களையும் கைகளையும் தரையில் ஊன்றி, ஓநாயைப் போலவே வேகமாக ஓடி அலைந்தனர். ஓநாயைப் போலவே ஊளை இட்டனர். விலங்குகளை வேட்டையாடி அவற்றின் இறைச்சியைப் பச்சையாகச் சுவைத்து உண்டனர். மனிதர்களைக் கண்ட மாத்திரத்தில் ஓடி ஒளிந்துகொண்டனர். குழந்தைப் பருவத்தில் இருந்தபோது ஓநாய்களால் அச்சிறுமியர் காட்டுக்குத் தூக்கிச் செல்லப்பட்டிருக்க வேண்டும். மனிதக் குடும்ப வளர்ப்பைக் குழந்தைப் பருவத்திலேயே இழந்துவிட்ட அச்சிறுமியர் ஓநாய்களைப் போலவே வளர்ந்தனர்; வாழ்ந்தனர். ஓநாய் என்பது மட்டுமன்றி எந்த விலங்கின் சூழலிலும் கடத்தப்பட்டு

* திருவள்ளுவம் 'சிற்றினம் சேராமை' எனும் அதிகாரம் (46) சமூகவியல் செய்தி நிறைந்ததாகும்.

வளர்க்கப்பெறும் குழந்தை அந்த விலங்குகளின் இயல்பையே பெற்று வளர்கிறது. லிதுவேனியாவில் (1661) கரடிக் கூட்டத்தில் அகப்பட்டுக் கொண்ட ஒரு பையன், அயர்லாந்தில் (1671) செம்மறி ஆடுகளுக்கு நடுவில் வாழ்ந்துவந்த ஒரு குழந்தை, பிரான்சில் (1797) மனிதக் குரங்குகள் கூட்டத்தில் வளர்ந்துவந்த ஒரு பையன், ஹாலந்தில் (1815) காட்டுப்பன்றிக் கூட்டத்தில் வாழ்ந்திருந்த ஒரு பையன், இலங்கையில் (1966) காட்டெருமை மத்தியில் வளர்ந்து வந்திருந்த ஒரு சிறுமி, முதலான அனைவரும் அவர்கள் வளர்க்கப்பட்ட விலங்குகளின் நடத்தையையே பெற்றிருந்தனர். நான்கு கால்களால் நடந்தனர்; மனிதமொழி பேசாது இருந்தனர்; விலங்கு உண்ணும் உணவையே உண்டனர். தமிழ் இலக்கியத்தில் மணிமேகலைக் காப்பியத்தில் பசுவால் பாலூட்டி வளர்க்கப்பெற்ற ஆபுத்திரன் என்ற பெயரீடும், இச்சமூகவியல் பின்னணியோடு இணைத்து நினைக்கத்தக்கதாகும்.

### 6.3.1. குடும்பம் மிக மிக இன்றியமையாதது

ஆக, குடும்பம் என்பது பிறந்த குழந்தையைச் சமூகமயப்படுத்துவதில் மிக இன்றியமையாத இடம் வகிக்கிறது. ஒருவன் முழுமை வாய்ந்த மனிதனாக விளங்க வேண்டுமானால் மனிதக்குணங்களும், நடத்தைகளும், பேசும் திறனும் அவனிடம் ஏற்பட வேண்டுமானால் அவன் குடும்பத்தில் - சமூகத்தில் - சமூக உறவுகள் நிலவும் ஏதாவது ஒரு குழுவில் வளர்ந்தாக வேண்டும். தான் யார் என்பதை உணரவும், தான் ஆணா பெண்ணா என்பதை அறிந்து கொள்ளவும், மனவளர்ச்சி பெறவும், அறிவு வளர்ச்சி பெறவும், உணர்ச்சிப் பக்குவம் பெறவும் ஒருவனுக்குச் சமூகத் தொடர்பு கட்டாயமாகிறது. அது குடும்பம் வழியே தொடங்குகிறது. 'தொட்டில் பழக்கம் சுடுகாடு வரை' என முன்பே சுட்டப்பட்ட தமிழ்ப் பழமொழி முற்றும் பொருள் அழுத்தம் உடையதாகிறது.

### 6.4. குடும்ப வகை

சமூகவியலார் உலகில் உள்ள நூற்றுக்கணக்கான இனங்களையும் சமுதாயங்களையும் ஆராய்ந்து குடும்பத்தில்

அமையும் உறவுகளின் (kinship) எண்ணிக்கைக்கு ஏற்பக் குடும்பத்தைக் கருக் குடும்பம், கூட்டுக் குடும்பம் என்று வகைப்படுத்துகின்றனர்.

### 6.4.1. கருக்குடும்பம்

கணவன், மனைவி அவர்கள் பெற்ற பிள்ளைகள் மட்டும் அடங்கிய குடும்பமாகும்.

### 6.4.2. கூட்டுக் குடும்பம்

உறவுடைய இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கருக்குடும்பங்கள் ஒன்றாக ஒரே வீட்டில் சேர்ந்து வாழ்ந்தால் அது கூட்டுக் குடும்பமாகும். தன் மனைவி மக்களோடும், தன் பெற்றோர்களோடும் சேர்ந்து வாழ்வது அல்லது ஒருவன் தன் மனைவி மக்களோடு, சகோதர அல்லது சகோதரி குடும்பங்களோடு சேர்ந்து வாழ்வது அல்லது ஒரு மனைவி தன் மக்களோடும் பெற்றோர்களோடும் சகோதரனுடைய குடும்பத்தோடும் சேர்ந்து வாழ்வதுமாகும். கூட்டுக் குடும்பத்தின் சிறப்பு, அக்குடும்ப உறுப்பினர் ஒரு பொது மூதாதையைக் கொண்டிருப்பர்; பொதுவான சொத்தைக் கொண்டிருப்பர்; குடும்ப உறுப்பினர் ஈட்டும் நிதியங்கள் பொது நிதியாக வைக்கப்பட்டிருக்கும்.

### 6.4.3. தாய் / தந்தை தலைமைக் குடும்ப முறைகள்

குடும்பத்தை அதற்குத் தலைமை வகிப்பவரை அடிப்படையாக வைத்தும் வகைப்படுத்துவது உண்டு. ஒரு குடும்பம் பெண்ணைத் தலைமையாகக் கொண்டு இயங்கினால் அது தாய்த் தலைமைக் குடும்பம். தந்தையைத் தலைமையாகக் கொண்டு இயங்கினால் தந்தை தலைமைக் குடும்பம்.

### 6.4.4. மருமக்கள் வழி / மக்கள் வழி

தலைமுறை அடிப்படையிலும், சொத்துரிமை அடிப்படையிலும் குடும்பம் வகை செய்யப்படுதலும் உண்டு. ஒரு குடும்பத்தில் தந்தை வழியில் தலைமையும், சொத்துரிமையும் வந்தால் அது தந்தை வழி (மக்கள் வழிக்) குடும்பம் ஆகும்.

தாய்வழியில் தலைமுறையும் சொத்துரிமையும் வந்தால் அது தாய் வழிக் (மருமக்கள்) குடும்பம் ஆகும். தமிழரிடையே பொதுவாகத் தந்தை வழிக் குடும்ப அமைப்பு இருந்து வருகிறது. எனினும் தமிழகத்தின் தென்பகுதியான குமரி மாவட்டத்திலும், பழைய தமிழகத்தின் ஒரு பகுதியான கேரளத்திலும் தாய்வழிக் குடும்ப முறையே பெரிதும் இருந்து வந்தது. அது வெள்ளைக்காரர் காலத்தில் சட்டம் இட்டு மாற்றப்பட்டது. 'மருமக்கள் வழி' என்று அது குறிப்பிடப்பட்டது. பெண் குழந்தைகளுக்குப் பெயரிடும் போது தாயின் பெயருக்குரிய முதலெழுத்தே பதிவுசெய்யப் பெற்றது. தாயின் சொத்துகள் மகளுக்கு இறங்கி அவள்வழி குழந்தைக்ளுக்கும் சென்று சேர்ந்தது. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை எழுதிய 'மருமக்கள் வழி மான்மியம்' எனும் அங்கதப் படைப்பு இதனை அருமையாகச் சித்திரிக்கிறது.

தமிழர் வரலாற்றையும் தமிழ் இலக்கியங்களையும் நோக்குகிறபோது தமிழரிடையே நடைமுறையில் இருந்த குடும்பமுறை புலனாகிறது. சங்ககாலத்தில் தனிக் குடும்பமுறை செல்வாக்கில் இருந்தது. கூட்டுக் குடும்ப அமைப்பிலேயே நம் தமிழ்க் குடும்பங்கள் அண்மைக்காலம் வரை இருந்துவந்ததை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். இவ்வமைப்பு பிற்காலத்ததாக இருக்க வேண்டும் அல்லது ஒரே காலத்திலேயே சில சமூகங்களில் தனிக் குடும்ப முறையும் வேறு சில சமூகங்களில் கூட்டுக் குடும்ப முறையும் போற்றப்பட்டிருத்தல் வேண்டும். இன்றும் கூட்டுக் குடும்பங்கள் ஒரு பக்கம் இருக்க, தனிக் குடும்ப முறை போற்றப்படுவதை நகரத்தார் குடும்பங்களில் காணலாம். ஐரோப்பியர் வரவிற்குப் பிறகு நம் நாடும் தொழில்மயமாயிற்று; நகர மயமாயிற்று. இவ்விரண்டின் விளைவாக ஆண்கள் பிறந்த குடும்பத்தில் இருந்தும், ஊரில் இருந்தும் வேலை கிடைக்கும் தொலைவில் உள்ள நகரங்களுக்குப் பயணம் ஆவது தவிர்க்க இயலாதது ஆயிற்று. அதன் விளைவாக அவர்க்குத் திருமணம் ஆன பிறகு தன் மனைவியை மட்டும் அழைத்துச் சென்று தன்னுடன் குடியமர்த்திக் கொள்ளுதல் மூலம் தனிக் குடும்பங்கள் பெருகத் தொடங்கிவிட்டன.

## குடும்பம்

குடும்பம் என்பது ஆண் பெண் பாலுறவை நெறிப்படுத்த அமைக்கப்பட்ட ஓர் அமைப்பு. ஒரு பெண் பல ஆண்களுடன் கூடி வாழ்ந்தால் அது Polygamy குடும்பம் ஆகும். ஒருவன் ஒருத்தி என வாழ்வார்களே ஆனால் அது ஒரு தாரக் குடும்பம் (monogamous family) எனப்படும். ஒரு பெண் பல ஆடவருடன் சேர்ந்து வாழ்ந்தால் பல கணவர் குடும்பம் (Polyandry family) எனப் பெறும். சங்க காலத்தில் ஒரு தாரக் குடும்பம் மிகுதியாகவும் பல பெண்கள் குடும்பம் சிறுபான்மையாகவும் இருந்தன எனலாம். ஒருவன் ஒருத்தி என்ற கணவன் மனைவி குடும்ப அமைப்பு, காதலன் காதலி என்ற சுதந்திரக் காதல் சமூகக் கண்டிப்பு பெரிதும் இன்றி ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது. தொல்காப்பியரின் 'பின் முறை வதுவை' என்ற கூற்றிலிருந்து ஒருவனுக்குப் பல மனையாட்டி உண்டு என்று தெரிகிறது. ஒருவனுக்குப் பல மனைவியர் ஒருத்திக்குப் பல கணவர் என்பது சமூகத் தொடக்க நிலைகள்.

ஆண்களும் பெண்களும் கூட்டமாக முறையின்றிப் பாலுறவு கொண்டு வாழ்ந்த நிலை தொல் நிலை. காலப் போக்கில் அந்நிலை சீர்திருத்தம் பெற்றது. பலகாலம் சென்ற பின்பே ஒருவர் + ஒருவர் என்ற கோட்பாடு குடும்ப அமைப்பில் தோன்றியது. எனவே ஒருவன் + பலர் என்று தொல்காப்பியர் குறிப்பிடும் பல பெண்கள் குடும்பம் தொல் நிலைக்குப் பின் வந்த நிலையாகும். தொல்காப்பியர் குறிப்பிடுவது போன்று ஒருவன் பல மனைவி என்ற கோட்பாட்டை வற்புறுத்தும் சான்றுகள் சங்க இலக்கியத்தில் இல்லை. எனினும், சங்க இலக்கியங்களில் ஒருவன் திருமணம் ஆகாமல் காதல் பரத்தையோடும் காதல் கிழத்தியோடும் வாழும் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. இதற்கு அடுத்ததாக ஒருவன் ஒருத்தியாக வாழ்வதே சரியான முறையாகும் என்ற கோட்பாடு உருவாகிறது. அதாவது,

1. வரன்முறை இன்றிப் பாலுணர்வு கொண்ட நிலை,
2. ஒருவர் + பலர்,
3. ஒருவர் மணமாகாமல் பலரோடு வாழ்ந்த நிலை,
4. ஒருவர் ஒருவரோடு வாழ்ந்த நிலை என்பன.

## 6.5. தமிழிலக்கியங்களில் தாய்வழிக் குடும்பம்

ஒரு குடும்பத்தின் தலைமைப் பொறுப்பு தந்தையிடம் அல்லது கணவரிடம் இருக்குமேயானால் அதனைத் தந்தைத் தலைமைக் குடும்பம் எனலாம். தலைமை, பெண்ணிடம் இருக்குமேயானால் அதனைத் தாய்த் தலைமைக் குடும்பம் (Matriarchal) எனலாம். வரலாற்றுக்கு முற்பட்ட திராவிடர்கள், தாய்வழிக் குடும்ப முறையிலேயே வாழ்ந்தனர். பழந்தமிழரிடம் தாய்வழி முறை இருந்தமைக்கான சான்றுகள் சங்க இலக்கியத் தொகுப்பில் வெளிப்படையாகப் பதிவாகவில்லை. இது வியப்புத்தான். தமிழ் மக்களின் அகவாழ்வைப் படம்பிடித்துக் காட்டும் அக இலக்கியங்கள் கூற்றுகளுக்கு உரியவராய்த் தாய், செவிலி, நற்றாய், தோழி, தோழன் முதலானோரைப் பட்டியல் இடுகிறது. தந்தைக்கும் தனயனுக்கும் கூற்றுகள் இல்லை. மகளின் களவுச் செயல்கள் பற்றி வருந்தும் பொறுப்பும், உடன் போக்கில் பிரிந்து மகளை மருமகன் வீட்டில் சென்று காணும் பொறுப்பும் தாய் அல்லது செவிலித் தாய்க்கே இருப்பனவாகச் சங்க இலக்கியப் பாக்கள் படம் பிடிக்கின்றன. எனவே ஒரு காலத்தில் பெற்ற பிள்ளைகளின் நடத்தை, திருமணம் முதலான பற்றிக் கவனிக்கும் பொறுப்பு தாய்க்கே இருந்தது என்பதை இக்குறிப்பு உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

குறிஞ்சி நிலத் தெய்வமான முருகனைச் 'சிவன் மகன்' எனக் குறிப்பிடாமல், மலைமகள் மகன் என்றும், கொற்றவை சிறுவன் என்றும், பழையோள் குழவி என்றும் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுவது தாய்வழி முறையின் எச்சமாகும்.

### 6.5.1. தாய்த்தெய்வ வழிபாடு

பண்டைத் தமிழ்ச் சமுதாயம் தாயை முன்னிறுத்திய தாய்வழிச் சமுதாயம். பெற்ற மகன் பெருமை எய்துவதைத் தாய் கண்டு பூரித்தாள். போரில் மகன் பெற்ற வெற்றியைக் கண்டு தாய் மகிழ்ந்ததாகப் புறப்பாடல்கள் சுட்டும். பெண்ணுக்கு என்றே தனிப்பெருங் கோயில் அமைக்கப் பெற்றது சேரத் தமிழகத்தில்தான். தமிழகத்தில் அம்மன் கோயில்களே மிகுதி! தமிழகத்தில்

வடபுலத்திலிருந்து ஆதிக்க மதங்கள் வரும்வரை தாய்த் தெய்வ வழிபாடே மேலோங்கி இருந்தது.

### 6.5.2. திணைப்பகுப்பு

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து திணைகள் பகுக்கப்பட்டுள்ளன. இத்திணைகளுக்கு உரிய உரிப்பொருள் பெண்ணை முன்னிறுத்தித்தான் அமைக்கப்பெற்றது. பெண்ணோடு சேர்ந்து உடன் உறைதல் (களவு வாழ்க்கை), 'குறிஞ்சி', பெண்ணோடு சேர்ந்து இருத்தல் 'முல்லை' (கற்பு வாழ்க்கை), பெண் தலைவன் மேல் கொண்ட ஊடலும் ஊடல் நிமித்தமும் 'மருதம்', பெண், கணவனைக் குறுங்காலமாகப் பிரிந்து இரங்கல், 'நெய்தல்'; பெண்ணைப் பொருள்வயின் பிரிந்த (நெடுங்காலமாகப் பிரிந்த) தலைவனை எண்ணி வருந்துதல் 'பாலை', என்று பெண்ணை முன்னிறுத்தியே திணைப் பகுப்புகள் அமைக்கப்பெற்றுள்ளன.

### 6.5.3. இருதார மண முறை

'ஒருவன் ஒருத்தி' முறையே இல்லற முறைமை என்று போற்றப்பெற்றது. இம்முறையே சமுதாயம் அமைதியாக நடத்தலுக்குத் துணை புரியும் என்ற சமூகவியல் கோட்பாட்டு அடிப்படையில்தான் காதல் முன்னிறுத்தப்பெற்றது. அதனைத் தொடர்ந்து 'கற்பு' வற்புறுத்தப்பெற்றது. 'பரத்தமை' இருந்ததாயினும் அது முற்றும் கண்டிக்கத்தக்கதாகவே கருதப்பெற்றது.

தனிமனிதர் மட்டுமல்லாமல் அரசியல் காரணங்களுக்காகக் கூட 'இருதாரமுறை' சங்ககாலச் சமுதாயத்தில் அனுமதிக்கப் பெறவில்லை. பல்லவர் காலம் முதற்கொண்டே அரசியல் காரணங்களுக்காக, அரசன் இரண்டு, மூன்று மனைவியரை ஏற்றுக் கொள்ளும் பழக்கம் தமிழகத்தில் அறிமுகமாயிற்று. பல்லவர் பிறப்பகம் தெலுங்கு நாடு என்பது சுட்டத்தக்கதாகும். அரசியர், இரண்டாம் மனைவியராகக் கூட அல்ல, தமக்கே உரிய காமக் கிழத்தியராகக் கூட வேறு பெண்ணை அண்டக் கூடாது என்பது ஓங்கிய கருத்தாக இருந்ததைப் 'பேகன் - கண்ணகி' வரலாறும், பேகனைக் கண்டித்த பரணர் முதலானோர் பாடல்களும் வற்புறுத்தின.

## பெண்ணே முழுத்தலைமை

போற்றற்குரிய தலைமக்களில் ஆணைக் குறிப்பிடும்போது 'தலைவன்' என்றும், பெண்ணைக் குறிப்பிடும்போது 'தலைவி' என்றும் குறிப்பிட்டமை சுட்டத்தக்கது.

மாமி, நாத்தனார் என்ற ஆதிக்க அமைப்பிலிருந்து விலக்கித், திருமணத்திற்குப் பின், பெண்ணுக்குச் சம தலைமை கொடுக்கும் 'மனையறம்படுத்துதல்' என்னும் தனிக் குடும்ப அமைப்பே இருந்தது. பெண், பெருங்குடும்பத்தின் துணை அல்ல (subordinate). அவள், முழுத்தலைமை உடையவளாக இயங்குவதற்கும், குடும்பத்தை இயக்குவதற்கும் வழி அமைக்கப்பட்டுவந்தது.

பண்டைக்காலத்தில் பெண் அரசியலில் முதன்மை பெற்றிருந்தாள், 'அதுவும் ஆணைவிடக் கூடுதலாகவே பெற்றிருந்தாள் என்பதை அவ்வையார், அதியமான் வரலாறு காட்டுகின்றது. தொண்டைமானிடம் அரசியல் தூது செல்லும் பெரும் பொறுப்பு அவ்வையாருக்கு அதியமானால் அளிக்கப் பெற்றிருந்தது. சாகா வாழ்வு தரும் நெல்லிக்கனியை அரசன் உண்ணாமல் பெண் புலவர்க்குக் கொடுத்ததற்கு இணையாக இன்னொரு நிகழ்ச்சி இல்லை. அரசியே பெண் புலவராகத் திகழ்ந்துள்ளார் என்பதற்குப் பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு சான்று. எனவே ஆதித் தமிழ்ச் சமுதாயத்தில் பெண் தலைமை பெற்றிருந்தாள்.

## 6.6. பண்டைத் தமிழர் வாழ்வில் தனிக்குடும்பம்

ஆதிகாலத்தில் திருமணம் என்ற கரணம் (சடங்கு) இல்லாமலே ஆணும் பெண்ணும் காதலித்து வாழ்ந்தனர். காதலுக்கு முதன்மை கொடுத்த முன்னைப் பழங்காலத்தில் உறவுமுறை வழிநேரும் திருமணங்கள் பொதுவாகப் பல்கி இருக்கவில்லை. அதற்கு யாயும் ஞாயும் யாராகியரோ என்று தொடங்கும் குறுந்தொகைப் பாடல் சான்று பகரும். சொத்துடைமை வந்த பிறகும் வலுத்த பிறகும் தான் தங்களுக்கு உரிய சொத்து வெளியே சென்றுவிடக் கூடாது என்ற கருத்தில் திருமணச் சடங்கு

தோன்றியது; திருமணமும் உறவுமுறைக்குள் நிகழுமாறு பார்த்துக் கொள்ளப்பெற்றது. கொடுப்போர் இன்றிக் காதலித்துத் திருமணம் நிகழ்ந்த நிலை பழைய நிலை. எங்கோ அருவிக் கரையிலோ தினைப் புனத்திலோ கண்ட காதலனை / காதலியைக் காதலித்துச் சங்க கால இன மக்கள் வாழ்ந்தனர். பெற்றோரை விட்டுவிட்டுப் பிரிந்து உடன்போக்குச் சென்றனர். தலைவனோடு தனிக் குடித்தனத்தில் வாழ்ந்தனர். அவர்களைச் சென்று செவிலித்தாய் பார்த்ததாகச் சங்க இலக்கியக் குறிப்பு காட்டும். இதிலிருந்து உடன்போக்கு சென்ற மகளும் மருமகனும் தாய்வீட்டில் அல்லது தாய்வாழ் ஊரில் இருக்கவில்லை என்பது தெரிகிறது. மகளையும் மருமகனையும் அயலூரில் சென்று பார்க்கும் செவிலித்தாய் பார்வையில் மருமகனின் பெற்றோர் கண்ணில்பட்டதாகக் குறிப்பு எதுவும் இல்லை. தாய், தந்தை, உடன்பிறந்தான் ஆகியோர் சென்று பார்ப்பது போன்ற குறிப்புகளோ, பேரக் குழந்தைகளுடன் தந்தை தாய் வீட்டிற்கு மகள் வருவது போன்ற குறிப்புகளோ சங்க இலக்கியத்தில் காணப்பெறவில்லை. உடன்போக்குச் சென்றவள் தன் மாமனார் வீட்டில் குடியிருந்ததாகக் குறிப்பு இல்லை. ஆகவே தனிக் குடும்ப வாழ்க்கை நெறியே தொடக்கத்தில் போற்றப்பட்டதாக உய்த்து உணரலாம்.

### 6.6.1. தனிக்குடும்பமும் முறைப்பெயர்களும்

இஃது வேறு சில சான்றுகளாலும் உறுதிஆகின்றது. தமிழர் உறவு முறைப் பெயர் ஆய்வில் குறிப்பாகச் சங்க இலக்கியத்தில் பாட்டன், பாட்டி பற்றிய சொற்குறியீடுகள் கிடைக்கப் பெறவில்லை. அன்றியும் மகன் வழிப் பிறந்த பெயரன், பெயர்த்தியோடு பாட்டன், பாட்டி கொஞ்சும் காட்சி சங்க இலக்கியப் பெரும்பரப்பில் இடம்பெறவில்லை. தந்தை, தாய், மக்கள் எனும் குறிப்புகள் இடம்பெற்றுள்ளனவே தவிரப் பாட்டன், பாட்டி, மகன் / மகள், மருமகன் / மருமகள், பேரக் குழந்தைகள் என்ற குடும்ப அமைப்பு சங்க இலக்கியத்தில் தென்படவில்லை. பாட்டன், தாத்தா என்ற தனிக் குறியீடுகள் இல்லாமல் இவன் சாத்தனுடைய தந்தை என்று குறிக்கப் பட்டமையைத் தொல்காப்பியம் குறிக்கும் (தொல். எழுத்து 347).

தன் தந்தையின் பெயரைத் தன் மகனுக்கு வைத்தானோ என்ற ஐயத்தைத் தந்தை பெயரன் (ஐங்குறுநூறு 403) என்ற வழக்காறு உணர்த்தும். மகளுக்கு யார் பெயரை வைத்தனர் என்பது தெளிவாகவில்லை. இவை கூடப் பெயர் வைப்பைக் காட்டுவனவே தவிரக் கூட்டுக் குடும்ப முறையைக் காட்டுவன அல்ல.

## 6.6.2. கூட்டுக் குடும்பம் பண்டு இல்லாமை

கூட்டு குடும்ப முறை உருவாகவில்லை என்பதை வேறு சில குறிப்புகளும் உய்த்துணர வைக்கின்றன. சங்கம் மருவிய இலக்கியமான சிலப்பதிகாரத்தில் திருமணம் முடிந்த பிறகு கண்ணகி தனிக் குடும்பமாக வைக்கப்பெறுவதை மனையறம் படுத்த காதை தெளிவுபடுத்துகின்றது. கோவலன் மாதவியிடம் வாழ்ந்த காலம் ஆண்டுக்கணக்காக இருந்தபோதும் கூடத் தனியாக இருந்ததாகவே சிலப்பதிகாரக் குடும்ப அமைப்பிலிருந்து உய்த்துணர முடிகின்றது. கோவலன் பிறந்த வணிகக் குடும்பத்தினர் எனக் கருதப்பெறும் நாட்டுக்கோட்டைச் செட்டியாரிடத்து இன்றும் தனிக்குடும்ப நெறி போற்றப்படுகிறது.

பரத்தையர் குலத்துள் பிறந்த மாதவி கூடத் தனக்குக் கோவலனிடம் மணிமேகலை பிறந்து வளர்ந்த பிறகும் கோவலன் இறந்த பின்பு ஆறாத் துயரம் மிகும் பொழுதும் கூடத் தாய் சித்ராபதியுடன் கூட்டுக் குடும்பமாகச் சேர்ந்து இல்லாமல் மாதவி தன் மகள் மணிமேகலையுடன் தனித்து இருப்பதை மணிமேகலை படம்பிடிக்கிறது. இந்திரவிழாவில் பங்கேற்கத் தன் மகள் மணிமேகலையுடன் வராத மாதவி இருப்பிடம் நோக்கி, வயந்த மாலை என்ற தோழியைச் சித்ராபதி தூது அனுப்பியதாக மணிமேகலை உரைக்கிறது.

மணிமேகலையொடு மாதவி வாராத்
தணியாத் துன்பம் தலைத்தலை மேல்வரச்
சித்ராபதிதான் செல்லலுற்று இரங்கி

---

வயந்த மாலையும் மாதவி துறவுக்கு
அயர்ந்து மெய்வாடிய அழிவினள் ஆதலின்

**மணிமேகலையொடு மாதவி இருந்த**
**அணிமலர் மண்டபத்து**

மேற்கண்ட குறிப்பிலிருந்து மாதவியும் மணிமேகலையும் தாய் சித்ராபதியுடன் உறையாமல் அணிமலர் மண்டபத்தில் தனியே வாழ்ந்ததை அறிய முடிகின்றது.

எனவே, சமூக மானுடவியலார் கருத்துப்படி பழந்தமிழரும் தொடக்க காலத்தில் தனிக்குடும்ப நெறியைப் போற்றிவந்தனர் என உய்த்துணர முடிகின்றது. நிலஉடைமையும், சொத்துடைமையும் பெருகிய பின்னர் தான் விடுதலையான காதல் வாழ்விற்கு ஊறு நேர்ந்தது. தம் குடும்பத்து உள்ளேயே சொத்து அதிகாரம் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும் என்ற நோக்கில் திருமணச் சடங்கு அறிமுகமாயிற்று. காலப்போக்கில் அத்திருமணமும் பெற்றோர் வழிச் சார்ந்த உறவுக்குள் நிகழவேண்டும் என்பது கட்டாயம் ஆயிற்று. சொத்தைப் பகிர்ந்து அனுபவிப்பதில் கூட்டுக் குடும்ப முறை தவிர்க்க முடியாததாயிற்று.

# 7

# அரசு

## 7.1. அரசின் தோற்றம்

தனிமனிதன், குடும்பம் ஆகியன அடக்கியன கூட்டாக அமையும் போது அரசு எனும் ஓர் அமைப்புக்கு அழைத்துச் செல்கின்றன. சமூகச் செயல்பாடுகள் எதிலும் ஈடுபடாத எஸ்கிமோக்களும் லூசான் நாட்டு இஃபுகாஓக்களும் (Ifugao) வரையறுக்க முடியாத ஒற்றுமை உடையவர்களாகவும், விசுவாசம் உடையவர்களாகவும், ஒத்துழைப்பு உடையவர்களாகவும் இருக்கின்றனர். முழு உருவம் பெறாத அரசு இங்கே உருவாகி விட்டது என்றே கூறுதல் வேண்டும். ஆக அரசு என்பது சமூகமும் சமூகத்திற்கு மேற்பட்ட சிலவும் கொண்டது ஆகும். அரசின் தோற்றத்திற்குப் பல்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன.

1. பொதுச் செயல் ஒன்று செய்ய வேண்டிய தேவை நேரும் போது பழங்குடி மக்கள் முதியவனைத் தலைவனாகத் தெரிவு செய்கிறார்கள். சிலரின் துணிகரமான செயல்களுக்காகவும் அசாதாரண திறமைகளுக்காகவும் துணிந்து செய்யும் தீய செயல்களுக்காகவும் சிலர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் படுவதுண்டு. எஸ்கிமோக்கள் தம்மிடம் ஏற்படும் சச்சரவைத் தீர்ப்பதற்காகவும், வேட்டையாடுதல் மீன்பிடித்தல் முதலியவற்றில் ஏற்படும் குழப்பங்களைத் தவிர்ப்பதற்காகவும் தமக்குள் தலைவரைத் தற்காலிகமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவர்.

## 7.2. அரசின் இன்றியமையாமை

பகைக் குழுக்களின் மோதல், உணவு நெருக்கடி ஆகியனவும் சிலரைத் தலைவராக முன் நிறுத்திவிடும். இவ்வாறு வரும்

தலைவர்கள் நிலையாகத் தலைவராக நீடித்து விடுவதும் உண்டு. இத்தலைவர்களை ஒட்டியே அரசு என்னும் நிறுவனம் மெல்லப் படருகிறது. அரசு மனிதருடைய முக்கியத் தேவைகளுக்காக இருக்கிறது; மனிதனுடைய நல்வாழ்க்கைக்காகத் தொடர்ந்து இயங்குகிறது. மனிதன் முதலில் குடும்பத்தையும், இரண்டாவதாகச் சமூகத்தையும், மூன்றாவதாக அரசையும் சார்ந்து இருக்கிறான். சமூகம் சிக்கலாக இயங்கத் தொடங்கும்போது அரசின் இன்றியமையாமை முதன்மை பெறுகின்றது.

## 7.2.1. மார்க்சீயப் பார்வையில் அரசின் தோற்றம்

மார்க்சீய அறிஞர்கள், அரசு என்னும் நிறுவனம் கட்டாயப்படுத்தும் வல்லமை உடையது என்று வாதிட்டனர். முதலாளிகள் தொழிலாளர்களைச் சுரண்டுவதும், கொடுமைப் படுத்துவதும் அரசு என்ற அமைப்பால் என்று வாதிட்டனர். தலைமையில் அதிகாரங்களை குவித்து ஆளும் அரசமுறை அழிந்து மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ளும் கம்யூனல் அரசைக் கனவு கண்டனர். அரசு என்ற அசுர எந்திரம் மக்கள் தோள் மேலும் தலை மேலும் ஏறிக்கொண்டு அதிகாரம் செய்வதும், ஆட்டிப்படைப்பதும் அரச வல்லாண்மையைக் காவல் துறை, இராணுவங்களின் வழி மக்கள் மேல் செலுத்துவதும் இன்றைய நடப்புகள்.

## 7.2.2 ஆளும் உரிமை வாரிசு உரிமையான வரலாறு

தொடக்க காலங்களில் அரசத் தலைமை என்பது முதுமை, அனுபவம், வலிமை, ஆளுமை ஆகியவற்றைப் பெற்றிருப்பவரைக் கொண்டு அமைந்திருத்தல் வேண்டும். காலப்போக்கில் தலைமைத் தகுதிக்கு வந்தோர் தம் ஆளும் உரிமையை நிலைப்படுத்திக் கொள்ளவும் தொடர்ந்து தன் தலைமுறையினரே ஆளவும் வகை செய்திருக்க வேண்டும். அரசனின் மகன் அரசன் எனும் வாரிசு உரிமை இவ்வாறே அறிமுகமாகி நிலைகொண்டிருக்க வேண்டும்.

## 7.2.3 அரசன் கடவுளாக்கப்படுதல்

அரசு உரிமை ஒரே வாரிசு நிலைபெறுவதற்கு வாய்ப்பாக அரசனை இறைமைப்படுதத்தும் முயற்சி நேர்முகமாகவோ

மறைமுகமாகவோ அரசனாலேயே வளர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். இதற்குத் துணையாக அவ்வக் காலத்துச் சமயங்களும் பூசாரிகளும் பயன்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும். பேரறிஞர் திருவள்ளுவரே இறைமாட்சி என அதிகாரப் பெயர் கொடுத்தும் (அதிகாரம் 39),

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப்படும்** *(குறள் 388)*

என்று கூறியும் அரசனை இறைமைப்படுத்திவிட்டார். தமிழ்நாட்டு அளவில் அரசன் மகன் அரசன் என்ற வாரிசு உரிமையும் அரசனை இறைவனுக்கு நிகராகப் போற்றுதலும் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்பட்டன. இந்த வாரிசு உரிமை அரசுக்கு எதிராக மாற்று அரசமுறையைப் பற்றித் தமிழர் சிந்தித்ததற்கான சான்று இல்லை. ஊராட்சி அமைப்பில் குடவோலை முறை அல்லது திருவுளச் சீட்டு முறை தமிழர்தம் இடைக்கால ஆட்சிக் காலங்களில் சில ஊர்களில், அதிலும் குறிப்பாக பிராமணர் வாழ்ந்த சதுர்வேதி மங்கலங்களில் போற்றப்பட்டதாகத் தெரிகிறது.

வாரிசு அரசமுறை எந்த அளவிற்குக் கண்மூடி கடைபிடிக்கப்பட்டதற்குத் தமிழர் வரலாற்றில் சான்று உள்ளது? சங்ககாலப் பாண்டியர் அரசில், பால்விட்டு அயினி அயின்ற பருவத்தில் அரசன் ஆண் குழந்தையை விட்டுவிட்டு இறந்துவிட, சிறுவனுக்கு அரசனுடைய மகன் எனும் ஒரே காரணத்தால் பட்டம் சூட்டப்பட்டதைத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வரலாற்றில் பார்க்கிறோம் (புறநா. 77). அரச குடும்பத்தினரையே ஆட்சி பீடத்தில் அமர்த்த வேண்டும் எனும் கட்டாயத்தால் முதிர்ச்சி அடையா இளமைப் பருவத்தினர்க்கு முடி சூட்டுவது இந்திய அரசியலிலும் உலக அரசியலிலும் தொடர்ந்து நடந்திருக்கின்றன.

**மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்**
**பால்தர வந்த பழவிறல் தாயம்** *(புறநா. 75)*

என்பது புறநானூறு.

முழுமையான குடியாட்சி பற்றித் தமிழ்ச் சமூகத்தினர் எண்ணினதற்கான சான்று இல்லை. ஆனால் குடிமக்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் ஆட்சிமுறை சிந்தனையில் மட்டுமன்றி நடைமுறையிலும் கிரேக்க நாட்டில் இருந்திருக்கிறது. கி.மு.விலேயே சாக்ரட்டீசுக்குத் தண்டனை வழங்கிய அமைப்பு குடியரசு அமைப்பில் அமைக்கப்பட்டதுதான். எனவேதான் கொடியவர்கள் குடியரசு அமைப்பில் பெரும்பான்மையாகி சாக்ரட்டீசு போன்ற பேரறிஞருக்கு மரணதண்டனை வழங்கினர். இத்தீர்ப்பால் பாதிப்பு உண்ட பிளேட்டோ தம்முடைய புகழ் பெற்ற படைப்பான 'ரிப்பப்ளிக்' எனும் நூலில் குடியரசு முறையை முதன்மைப் படுத்தவில்லை. தொண்டுள்ளம் வாய்த்த அறிஞர்களின் கைவசமே அரசாட்சி இருக்க வேண்டும் என்று பரிந்துரைக்கிறார். அவருடைய மாணவரான அரிஸ்டாட்டில் தனி நபராட்சி மொனார்க்கி (monarchy), பிரபுக்கள் ஆட்சி (aristocracy), குடியாட்சி (democracy) என்ற மூன்றையும் பரிந்துரைக்கிறார்.

இன்றைய நடப்புலகத்தில் குடியரசு ஆட்சி, சர்வாதிகார ஆட்சி, பரம்பரை ஆட்சி என மூன்று வகைப்பட்ட அரசுகள் இயங்கி வருகின்றன. குடியரசு ஆட்சியில் இங்கிலாந்து பாணியிலான நாடாளுமன்ற ஆட்சி, அமெரிக்கப் பாணியிலான நேர்முகத் தேர்ந்தெடுப்பில் வரும் அதிபர் ஆட்சி, இரண்டும் கலந்த ஃபிரெஞ்சு முறை ஆட்சி ஆகியன நடைமுறையில் உள்ளன. குடியரசு ஆட்சி அமைப்பில் தவறுகள் இல்லை என்றோ தவறுகள் நிகழ வாயப்பு இல்லை என்றோ உறுதிப்படுத்திவிட முடியாது. ஏனைய சர்வாதிகார ஆட்சியிலும் அரசப் பரம்பரை ஆட்சியிலும் தவறு செய்யும் ஆட்சியாளர்களை நீக்கும் வாய்ப்பு மக்களுக்கு எளிதாக அமைவது இல்லை. வாக்கு அளிக்கும் முறையால் குடியரசு முறையைத் தேர்தல் வரும்போது வேண்டாதவரை மக்கள் தோற்கடித்துப் பதவியிலிருந்து துரத்த வாய்ப்பு இருக்கிறது. எனினும் குடியரசாட்சியைப் பெரும்பான்மைக் கட்சியினர்தம் சர்வாதிகார ஆட்சி என்றும், கட்சியின் சர்வாதிகார ஆட்சி என்றும் உலக நடப்புகளைப் பார்த்துக் கருதுவோர் உள்ளனர்.

# 8

# சாதி

## 8.1. சாதி: சொற்பொருள்

சாதி என்ற சொல்லிற்குப் பிரிவு என்று பொருள். நீரில் வாழும் உயிர்களை மரபியலில் பேசும் தொல்காப்பியர் இப்பொருளில் நீர்வாழ் சாதி எனக் கையாளுவர். தமிழ் இலக்கண இலக்கியங்களுள் சாதி என்ற சொல் ஆளப்பட்டுள்ள மிகப் பழைய இடம் இதுவே. இச்சொல்லிற்குப் பொருளை வரையறுக்கும் தமிழ்ப் பேரகராதி காலந்தோறும் இச்சொல் அடைந்த பொருளைக் குறிப்பிடுகிறது.

ஆங்கிலத்திலும் பிரஞ்சிலும் சாதி என்ற இந்தியச் சொல்லைக் 'காஸ்ட்' (caste) என்ற சொல்வழியாகச் சுட்டுவர். இச்சொல் 'காஸ்டா' என்ற ஸ்பானிசு மொழிச் சொல்லிலிருந்து தோன்றியதாகும். காஸ்டா (casta) என்பதற்கு இனம், குலத்தூய்மை போன்ற தலைமுறைப் பண்புகளின் தொகுதி என்பது பொருளாகும். தொடக்கத்தில் இந்தியாவிற்கு வந்த போர்ச்சுகீசியர்கள் இந்தியரிடம் இருந்த சாதி அமைப்பை மேற்கண்ட சொல்லால் சுட்டியுரைத்தனர். மொழி அடிப்படையில் இச்சொல்லின் பொருள் எளிதாக இருப்பினும் சமூகவியலில் இச்சொல்லின் பொருளும், செயல்பாடும் இந்தியச் சூழலில் மிக ஆழ்ந்த பொருளுடையவை. எனவே, சாதியை அறிஞர் பலரும் பலவாறாக விளக்குவர். மக்ஈவர், கிட்கர், கூரியே, ஹட்டன் முதலானோர் விளக்கங்கள் சுட்டத்தக்கவை.

## 8.2 சாதியின் இயல்புகள்

சமூகவியல் அறிஞர்கள் சாதிமுறையின் ஆறு இயல்புகளைப் பின்வருமாறு சுட்டுவர்.

1. சாதி, பிறப்பு வழியில் தீர்மானிக்கப்பெறுகிறது. எந்தச் சாதியில் பிறக்கின்றானோ அந்தச் சாதியை அவன் சார்ந்தவனாவான். அதிலிருந்து எக்காரணம் கொண்டும் மாறமுடியாது.

2. எந்த உணவை உட்கொள்ளலாம், உட்கொள்ளக்கூடாது என்பதைச் சாதி வரையறை செய்கிறது. உணவு அடிப்படையில் சாதி ஒரு காலத்தில் வகுக்கப்பட்டு இருக்கலாம். புலால் உண்ணாதவர் மேல் சாதியினர் என்றும் உண்ணும் சாதியினர் கீழ்ச் சாதியினர் என்றும் பிரிக்கப்பட்டு, மாட்டு இறைச்சியை உண்போர் மிகமிகக் கீழ்ச் சாதியினர் என்றும் பகுக்கப்பட்டு இருக்கலாம்.

3. சாதிக்குள்ளேயே திருமணம் செய்துகொள்ளும் அகமண முறை கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப்பெற்றது.

4. சாதி அமைப்பு உயர்சாதியினரான பிராமணர்களோடு கொண்டுள்ள உறவை மையமாகவைத்துப் பல்வேறு படிநிலைகளாகப் பிரிக்கப்பெற்றது.

5. ஒவ்வொரு சாதியினரும் குறிப்பிட்ட ஒரு தொழிலைத் தலைமுறை தலைமுறையாகச் செய்து வந்தனர். மற்றச் சாதியினர் அத்தொழிலைச் செய்ய அனுமதிக்கப்படுவது இல்லை. தொழில் இரகசியம் இதன் வழிப் பேணப்பெற்றது.

6. சாதி தனது உறுப்பினர்கள் மீது அதிகாரம் செலுத்தும் ஆற்றல் வாய்ந்தது. சாதிப் பஞ்சாயத்துக்கு உறுப்பினரைத் தன் குழுவில் வைத்துக்கொள்ளவோ, மீறுபவர்களை விலக்கவோ உரிமையுண்டு.

### 8.3 சாதியுள்ள இடங்கள்

1. பிறப்பு அடிப்படையில் மிக இறுகிய ஒன்றாகக் காணப்பெறும் சாதி அமைப்பு இந்தியாவில் மட்டுமே தலைமை இடம்பெற்று நிலைத்தது. ஆனால் வேறு சில நாடுகளில் சாதியைப் போன்ற பிரிவுகள் இருந்துள்ளன. மலாய்த் தீவு, சோமாலி நாடு, பர்மா, பாலினேசியா, எகிப்து, சப்பான், ரோம் போன்ற நாடுகளில்

சாதி அமைப்பு போன்ற சில பிரிவினைக் கூறுகள் இருந்தன. சப்பானில் ஈத்தா (Eta) எனப்படும் தீண்டாமைச் சாதியுள்ளது. இவர்கள் ஏனைய சப்பானியரிடம் இருந்து உருவத்தாலோ நில வேறுபாட்டாலோ வேறுபட்டவர்கள் அல்லர். ஆயினும் தொழிலால் சக்கிலியர் தொழில் காரணமாக இவர்கள் தொடர்ந்து ஏனையோரால் ஒதுக்கப்பெற்றனர். தனிமைப் படுத்தப்பெற்றனர். குடியுரிமை மறுக்கப்பெற்றனர். இவ்வரலாற்றுக் கட்டாயத்தால் அகமணக் குழுவினராக இவர்கள் வாழ்ந்தனர். இன்றும் இவர்கள் சக்கிலியத் தொழிலில் இறந்த கால்நடைகளை அப்புறப்படுத்தும் தொழில், கூடை வேய்தல், கூலிவேலை செய்தல் ஆகியவற்றைச் செய்து வருகின்றனர். இவர்தம் மக்கள் தொகை முப்பது இலட்சம்.

2. கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளில் ஒன்றான சோமாலியாவில் கொல்லர் தொழில் செய்வோர் தனியாகப் பிரிக்கப்பட்டுக் கீழ்நிலையில் வைக்கப்பெற்றுள்ளனர். எனவே, இவர்கள் அகமண முறையில் வாழ்ந்துவருகின்றனர்.

3. ஆப்பிரிக்கக் கண்டத்தில், இந்தியாவில் உள்ளது போன்ற சாதிய முறை இல்லையென்றாலும் இனக்குழு என்ற முறை இருக்கிறது. குவாண்டா என்ற ஆப்பிரிக்க நாட்டில் மூன்று சாதிகளை யுடைய சமுதாய முறை இருந்தது. உடல் தோற்றத்தாலும் செய்யும் தொழிலாலும் இவர்கள் வேறுபட்டு இருந்தனர். உயர்ந்த சாதியினர் 15 விழுக்காட்டினர் பெரும் நிலக்கிழார். மிக உயரமான தோற்றத்தினர். உயர் தொழிலாக இங்கே எண்ணப்பெற்ற ஆடுமாடு மேய்க்கும் தொழிலைச் செய்து வந்தனர். இவர்கள் துட்சி (Dutsi)என அழைக்கப் பெற்றனர்.

இவர்களுக்கு அடுத்த நிலையில் இருந்தவர் குட்டு (Hutu) எனக் குறிக்கப்பெற்றனர். உயரம் குறைந்தவர்களாவும், பருமனாகவும் இவர்கள் இருந்தனர். மொத்த சனத் தொகையில் 85 விழுக்காட்டினர். இவர்களுக்கு அடுத்த நிலையான மூன்றாவது நிலையில் இருந்தோர் துவா (Dwa) என்போர் ஆவர். மொத்த மக்கள் தொகையில் ஒரு விழுக்காட்டிற்கும் குறைவானவர். குள்ளர்கள். காட்டுப் பகுதியில் வேட்டை ஆடியும், உணவு சேகரித்தும் வாழ்ந்து வந்தனர்.

4. உகாண்டா என்ற பிறிதோர் ஆப்பிரிக்க நாட்டில் இனக்குழு சாதி முறை அங்கோள் அரசர்கள் ஆண்ட காலத்தில் இருந்தது. பகிமா என்றும், அமிட்புக் என்றும் பிளவுபட்டு இருந்தனர். இவர்கள் அல்லாமல் பெய்கு என்ற பிறிதோர் இனக் குழுவினரும் இருந்தனர். இவர்களிடையே திருமணம் நிகழ்வது இல்லை. காமக்கிழத்தியராகக் கூட மற்றவரை ஏற்றுக் கொள்வது இல்லை. நான்காவது இனத்தினராக அபம்பாரி என்ற கலப்பினம் தோன்றியது. பகிமா தலைவர்களுக்கும், பெய்கு இனப்பெண்களுக்கும் இடையே தோன்றிய கலப்பினம். இவர்களுக்குக் கீழே அபக்கு என்ற அடிமை மக்களும் இருந்தனர்.

ஆனால் மேற்கண்டவை சாதி போன்ற - சாதியைவிட இறுக்கம் குறைந்த நெகிழ்வுடைய இனக்குழு அமைப்புகளே ஆகும். இவையும் கூட அறிவியல் உணர்ச்சியாலும், பொருளியல் மாற்றத்தாலும், அரசியல் விடுதலை பெற்றதனாலும் கிட்டத்தட்ட மாறிவிட்டன என்றே சொல்ல வேண்டும்.

## 8.4 இந்தியச் சாதிய முறை இறுகிய தன்மை

இந்தியச் சாதி முறை எதிர்பார்த்த அளவிற்கு இறுக்கத்தை விட்டு நெகிழவில்லை. இந்தியச் சாதி முறையின் தனிப்பெரும் கூறான தீண்டாமை ஓரளவு தளர்ந்து இருந்தாலும் சாதியக் கட்டுமானங்கள், சிதைவுபடாமலேயே இருந்துவருகின்றன. ஏறத்தாழ மூவாயிரம் சாதிகள் உள்ளன என்று கருதுகின்றனர். இவற்றில் உட்சாதிகள் வேறு உள்ளன. இந்தியச் சூழலில் அரசியல், பொருளியல் ஆகியவற்றைத். தீர்மானிக்கும் எசமான அதிகாரத்துடன் சாதி இன்றும் இருந்து வருகிறது. சமுதாயத்தை ஆட்டுவிக்கும் மகா சக்தியாக அஃது ஆட்சி செய்து வருகிறது. சாதி முறையை ஒழிக்க மத ரீதியாகக் கி.மு. ஐந்தாம் ஆறாம் நூற்றாண்டுகளில் சமண மதமும், பௌத்த மதமும், பேரீடுபாடு காட்டின. ஆனால் இவ்விரண்டு மதங்களுக்கு எதிரியாக இருந்து இரண்டு மதங்களையும் செல்வாக்கில் இருந்து வீழ்த்தித் தோற்கடித்த வைதிக சமயப் பிரிவுகள் சாதி என்ற அடிப்படைக்

கட்டுமானத்திலேயே உயிர்த்து நிற்கின்றன. பிற்காலத்தில் இந்தியாவிற்கு வருகை தந்த உலக மதங்களான இசுலாமும், கிறித்தவமும் கூடச் சாதிச் சார்பற்ற சமயமாகத் தத்துவ அடிப்படையில் விளங்கினாலும், காலப்போக்கில் இந்தியச் சூழலில் அவையும் சாதியை ஒப்புக்கொள்ளும் கட்டாயத்துக்கு ஆளாயின. இந்தியாவின் அனைத்து நிலைகளிலும் ஆட்டிப் படைக்கும் தனி ஆற்றலாகச் சாதி விளங்கிவருகிறது.

## 8.5 சாதித் தோற்றம் - பல்வேறு கோட்பாடுகள்

சாதிபற்றி இருந்து வரும் பல்வேறு கோட்பாடுகளை நிரல்படுத்திப் பார்த்தல் நல்லது.

### 8.5.1 இனக் கருத்துக் கோட்பாடு

ரிஸ்லி, மஜிந்தா, குரே ஆகியோர் இக்கருத்தினர். கி.மு. 1500 அளவில் காக்கேசியர் எனப்பெறும் ஆரியர்கள் வடமேற்கு இந்தியா வழியாக இந்தியாவிற்குள் நுழைந்தனர். அவர்கள் வெள்ளை நிறத்தினர். நீளமான மூக்கினர். அகன்ற நெற்றியினர். இந்தியப்பூர்வ குடிகளில் இருந்து முற்றும் வேறுபட்ட தோற்றத்தினர். உடல், நிறம், மொழி, வழிபாடு, பண்பாடு ஆகியவற்றால் பெரிதும் வேறுபட்டு இருந்த ஆரியர் உள்ளூர் மக்களைத் தாழ்த்த வருணாசிரம முறைகளைத் தோற்றுவித்தனர். உள்ளூர் மக்களை அடிமைகள் எனும் பொருள்படத் தஷ்யூக்கள், அதாவது தாசர்கள் என்று அழைத்தனர். பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என நான்கு வருணத்தை அமைத்து ஒவ்வொரு வருணத்தார்க்கும் உரிய கடமைகளையும் வரையறுத்தனர் பிராமணர்களின் தொழில் கற்றலும் கற்பித்தலும்; சத்திரியரின் தொழில் போர்; வைசியர்களின் தொழில் வணிகம்; சூத்திரர்களின் தொழில் மேற்கண்ட மூவருக்கும் குற்றவேல் புரிதல்.

### 8.5.2 போர்க் கோட்பாடு

சமூகப் படிநிலையில் தம்மை மேலான நிலையில் வைத்துக் கொள்ள ஆரியர்கள் திட்டமிட்டுச் செய்த அரசியல் சூழ்ச்சி, சாதிப் பிரிவினை, ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்தபோது அவருக்கும்

இந்தியாவில் இருந்த பூர்வீகக் குடிகளுக்கும் இடையே பூசல்களும், போர்களும் நிகழ்ந்தன. போர்த்திறம் மிக்கவரும், குழு உணர்வு உடையவரும், குதிரைப்படை பெற்றவரும் ஆகிய ஆரியர் இந்தியப் பூர்வீகக் குடிகளை வென்றனர் ஆதல் வேண்டும். வென்றவர்க்குத் தோற்றவர் அடிமையாதலே அல்லது அடிமைப்படுத்தலே ஆரியர்தம் போர்க் கொள்கையாகும். அடிமைப்பட்ட இந்திய மக்கள் பெரும்பாலானோரைக் கீழ்நிலைப்படுத்த 'சாதிப் பிரிவினையே மேற்கொண்டனர். மநுதர்ம சாத்திரம், சூத்திரர் என்ற பட்டியலுடன் போரில் தோற்றவரையும் சேர்க்கிறது.

### 8.5.3 சமயக் கோட்பாடு

அறிஞர்கள் சிலர் மதமே வருணப் பிரிவிற்கும் சாதிப் பிரிவிற்கும் அடிப்படை என்று கூறுகின்றனர். மேற்கண்ட இரண்டு பிரிவுகளும் இந்து சமயத்தின் ஒன்றிய பிரிவாகும். மத ஆளுமையைத் தம் கைவயம் வைத்திருந்த ஆரியர், சாதியக் கொள்கையை மத வழியும் உறுதிப்படுத்தினர் என்பர். சாதிப் பிரிவானது மாந்தர்களால் ஏற்பட்டதன்று, இறைவனால் ஏற்படுத்தப்பட்டது. பிரம்மாவின் தூய முகத்தில் இருந்து பிராமணர்களும், கையில் இருந்து சத்திரியர்களும், தொடையில் இருந்து வைசியர்களும், கால் அடியில் இருந்து சூத்திரர்களும் தோன்றினர் எனக் கற்பித்தனர்.

### 8.5.4 படிமலர்ச்சிக் கோட்பாடு

சாதி என்ற பிரிவு, சமுதாயத்தில் திடீர் என்று தோன்றி விடவில்லை. நீண்ட நெடுங்காலத்தில் படிப்படியாகவே சாதிப் பிரிவு தோன்றியிருக்க வேண்டும். இக்கருத்துக்கு அளிக்கப்படும் விளக்கங்கள் வருமாறு :

1. பரம்பரைத் தொழில்.
2. தம்மைச் சுத்தமானவர்களாக வைத்துக்கொள்ள வேண்டும் என்ற மேல் சாதியினரின் விருப்பம்.
3. பல்வேறு மதங்கள் தம்முள் மோதி ஒற்றுமையின்றி இருந்தமை.
4. எல்லார்க்கும் ஒரேவிதமான சட்டங்களைக் கொண்டு வருதல்.

வேறு வேறு வழக்கங்களை, வேறு வேறு அரசர்கள் கொண்டு வந்தது.

5. கர்ம வினைகளிலும், மறுபிறவியிலும் கொண்டிருந்த நம்பிக்கை.
6. மூதாதையரை வழிபடுவதும், புனித உணவுப் படையலும்.
7. தாய்வழி, தந்தைவழிப் பண்பாடுகளின் மோதல்கள்.
8. இன, நிற வேறுபாடுகளின் மோதல்கள்.
9. ஆதிக்கக்காரர்கள், ஆங்கிலேயர்கள் பின்பற்றிய பொருளாதாரக் கொள்கைகள்.
10. இந்தியத் துணைக்கண்டத்தின் நிலவியல் அமைப்பு.

### 8.5.5 தொழிற் கோட்பாடு

மக்கள் செய்த தொழில்களின் அடிப்படையில் சாதிப்பிரிவு தோன்றியது. மேல் சாதியினர், தூய்மையானவர்கள் என்றும், மேன்மை மிக்க தொழிலைக் கொண்டோர் என்றும் அவர்களுக்கு அடுத்தபடி, சத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் சாதிப்படி நிலையில் கீழே உள்ளனர் என்றும் கருதப்பெற்றது.

### 8.5.6 குலத்தேய்வுக் கோட்பாடு

பண்டு குலங்கள் என்பன இருந்தன. இக்குலங்கள் உறவையும் பிறப்பையும் அடிப்படையாகக் கொண்டு இருந்தன. இவை தமக்குள்ளாகவும், புறத்தாக்குதல்களாலும் பாதிப்பிற்குள்ளாயின.

### 8.6 தமிழகச் சூழலில் சாதியின் தோற்றம்

இக்கருத்தைத் தமிழகச் சுழலில்வைத்து ஆராயும்போது சாதியின் தோற்றத்தைப் பின்வருமாறு ஊகிக்கலாம்.

பண்டைய பொதுமைச் சமுதாயத்தில் இத்தகு பிறப்பு அடிப்படை வேறுபாடுகள் எதுவும் இல்லை. முதலில் ஏற்பட்ட பிரிவு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே அமைந்த வேலைப் பிரிவாகும். இதுவும், உயர்வு - தாழ்வு, ஆதிக்கம் - அடிமை என்ற நிலையில் தோன்றியிருக்க வாய்ப்பில்லை. உடல் உழைப்போடு

தொடர்புடைய உழைப்பிற்கு மதிப்பு இருந்தவரை மாந்தரிடையே மேலோர் கீழோர் என்ற பிரிவு ஏற்பட வாய்ப்பு இல்லை. மேலோர் கீழோர் என்ற பிரிவு தமிழகத்தைப் பொறுத்தவரை தொடக்கத்தில் ஆளுவோர், அவர்கீழ் வாழுவோர் என்ற அடிப்படையில் தோன்றியிருத்தல் கூடும். குழுவின் தலைமையை வலிமை, முதுமை, திறமை ஆகியவற்றால் அடைந்தான் ஆண் மகன், அப்பொறுப்பை நிலையாக்க அல்லது வாரிசு உரிமையாகத் தலைமையை அனுபவிக்க, தான் சேர்த்த உடைமையைத் தன் வாரிசில் உள்ளோர் நுகரவும் வாய்ப்பாகத் திருமணம் என்ற சடங்கு முறையை முதலில் அமைத்துக்கொண்டிருத்தல் வேண்டும். இம்முறையால் ஒரு தலைவனுக்குப் பிறகு பிறிதொரு தலைவனை வலிமை, முதுமை, திறமை எனும் அடிப்படையில் தெரிவுசெய்யும் முறைமை மாறித் தலைவனின் மகன் தலைவன் என்ற வாரிசு உரிமை தோன்றியது. இதில் தந்தை அரசனாயின் அவன் மகனும் அரசன் என்ற வாரிசுரிமை ஒரு கோட்பாடு போன்றாயிற்று. தலைமை உரிமை பிறப்புவழித் தீர்மானிக்கப்பட்டது. சாதியின் ஊற்றுக்கண் பிறப்பு வழித் தீர்மானிக்கப்பட்டதுதான் முதற்கட்ட நிலை ஆகும்.

அடுத்த கட்ட விரிவாக்கம், திருமண முறையால் கிடைக்கிற அரசு உரிமையும், சொத்துரிமையும் வெளியே செல்லாதவாறு, அடுத்துள்ள குழுவின், குழுத்தலைவனின் அல்லது இரத்தத் தொடர்புடைய உறவில் திருமணம் முடிக்க வேண்டும் என்ற நிலைமை தோன்றியது. இதனால் பண்டைய எகிப்தில் சொத்துரிமையைக் காப்பாற்ற அழகி கிளியோபாத்ரா தன் தம்பி டாலமியைத் திருமணம் செய்துகொண்டாள். தமிழகத்தில் சிலர் அக்காள் மகளை மணந்துகொள்ளும் முறை உள்ளது. சொத்து வெளியே போகாமல் தடுப்பதற்கு அமைந்தது இது; எனவே வாரிசு உரிமைக்காகவும், சொத்து உரிமைக்காகவும் பிறப்பு அடிப்படையில் உருவான தலைவன் குடிவழி அகமண முறை அரசியல் கட்டாயமாயிற்று. சாதியின் முதல் இறுக்கம் பிறப்பு என்றால் அதன் இரண்டாவது இறுக்கம் அகமண முறை ஆகும்.

எனவே தமிழகத்தைப் பொறுத்தவரை தலைமைக் குடி வழி அல்லது அரசுக் குடி வழியே சாதியத் தோற்றத்திற்குத் தொடக்கமாக இருந்திருக்க வேண்டும். தலைவனின் மகன்

தலைவன் என்ற பிறப்புரிமை அதற்காக அமைந்த அகமண முறை ஆகியன மேல்நிலை ஆதிக்கத்தால் ஏனைய மக்களாலும் காலப் போக்கில் மெல்ல மெல்லப் பின்பற்றப்பட்டிருத்தல் வேண்டும்.

### 8.6.1 தொழிலின் மேன்மை

தமிழர்கள் தொழில் அடிப்படையில் பிரிந்து இருந்தனர். தொடக்கத்தில் உயர் தொழில் இழிதொழில் என்ற வேறுபாடு இருந்திருக்க வாய்ப்பு இல்லை. வேட்டைத் தொழில் சிறப்பாகக் கருதப்பெற்றது. மீன்பிடி தொழில் உயர்வாக எண்ணப்பெற்றது. ஆடுமாடு மேய்க்கும் தொழில் சிறப்பாகப் போற்றப்பெற்றது. இதனை மருதம், குறிஞ்சி, நெய்தல், முல்லை ஆகிய நிலப் பிரிவுகளும், அவற்றுக்குரிய தொழில்களும் தெளிவுபடுத்துகின்றன. முருகன் வேட்டைத் தொழில் கடவுளாகவும், திருமால் மாடு மேய்க்கும் தொழில் கடவுளாகவும், கொற்றவை போர்த் தொழில் கடவுளாகவும் பெருமையகப் போற்றப்பெற்றனர்.

ஐந்திணை உரிப்பொருள்களில் கற்றல், கற்பித்தல், தொழில்களாகப் பேசப்படவில்லை. உழவு, வேட்டை, மீன்பிடி, கால்நடை மேய்த்தல் ஆகிய தொழில் ஈடுபட்ட மக்கள் ஏற்றத் தாழ்வற்ற தலைமக்களாகக் கருதப்பட்டனர். இவர்கள் தொழில் மாறி உறவு கொண்ட நிலையையும் சங்க இலக்கிய அகப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. இவையன்றி நுணுக்கம் வாய்ந்த தொழில்களான பானை வனைதல், நெசவு, தச்சு என்பன மனிதனுக்கு அடிப்படையான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றோடு தொடர்புடைய தொழில்கள். ஆண்டுச் செல்லச் செல்ல இத்தொழிலுக்கு உரியோர் திருமணம் செய்யும் போது அந்தந்தத் தொழில் நுணுக்கம் தெரிந்தோரைத் திருமணம் செய்ய நேர்ந்திருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, பானைவனையும் தொழிலில் பெண்ணே களிமண் உள்ள சக்கரத்தைச் சுற்றுபவளாகவும் இருந்தாள். எப்போதும் இருக்கிறாள். இத்தொழில் பொருள் நிமித்தம், இலாபம் நிமித்தம் என உற்பத்தி விரிவானபோது தொழில்நுணுக்கம் அல்லது தொழில் இரகசியம் ஆனது. அப்போது இரகசியம் காக்க அகமண முறையைக் கட்டாயம் ஏற்றுக்கொள்ளும் நிலைக்கு ஆளாயினர்.

எனவே, காலப்போக்கில் அந்தந்தத் தொழில் செய்வோர் அந்தந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்போரை உறவு ஆக்கும் கட்டாயம் ஏற்பட்டது. ஆக, தொழில் அடிப்படையில் பிரிவு ஏற்பட்ட நிலை மாறி பிறப்பு அடிப்படையில் தொழில் வந்திருக்க வேண்டும். தொழிலோடும் உற்பத்தியோடும் தொடர்புடைய மக்களே மேல்நிலையில் இருந்திருக்க வேண்டும் ஆனால் அவர்கள் கீழ்நிலை ஆக்கப்பட்டனர். எவ்வாறெனில் உழைக்காத மக்கள், உற்பத்தியோடு நேர்த் தொடர்பு இல்லாத மக்கள் மேல் ஏற்றப்பட்டனர். இதற்குக் காரணம் வெளியில் இருந்து வந்த மக்களின் போர்த் திறமையும், அதன் வழி அவர் உள்நாட்டு மக்களை வென்றமையும் ஆகும். அவர் தம்முடன் கொண்டு வந்த வழிபாடு, மதத்தின் தேவை அக்காலத்து இருந்த குழுத் தலைவனுக்கும் அவன் மன்னனுக்கும் தேவைப்பட்டன. மன்னவனுக்கு எதிராக மக்கள் போர்க்குரல் எழுப்பாமல் இருக்க வேண்டும் என்றால் மன்னவன் மேலானவன் என்று காட்டப்பட வேண்டும். அவ்வாறு காட்டுவதற்கு மதம் கைகொடுத்தது. மதம் அரசனை ஆண்டவன் என்றே அறிவித்தது. அரசனுக்குப் பக்கத்தில் மதத்தைக் கைவசம் வைத்திருந்த புரோகிதம் இடம்பெற்றது. மன்னவன் இறைவன் ஆக்கப்பட்டான். மநுதர்ம நூலிலும்,

"உலகம் அழியாதிருக்கும் பொருட்டே
இறைவன் மன்னனைப் படைத்தான்"

"அரசன் தீயாகவும், எமனாகவும், வருணனாகவும்,
தேவவேந்திரனாகவும் இருப்பான்"

என்று இறைமைத்தன்மை மன்னன் மேல் ஏற்றப்பட்டது.

அரசுரிமையை அரசக் குடும்பத்தினர் மட்டுமே அடைய முடியும் என்றாயிற்று. வேதங்களைப் பிராமணக் குடும்பத்தில் பிறந்தவர் மட்டுமே ஓத முடியும். ஏனைய தொழில் செய்தோர் அவ்வத் தொழிலை மட்டும் செய்யுமாறு ஆக்கப்பெற்றனர்.

தொழில் வழியே பல சாதிகள் தோன்றி நிலைபெற்று இருக்க வேண்டும். பறையர், கூத்தர், குயவர், குறவர், மறவர், புலையர், இடையவர், தச்சர், வேளாளர், தேலி (எண்ணெய் வணிகர்), மாலி (தோட்டக்காரர்), செம்மார் (தோல் தொழிலாளர்), லோகர்

(கொல்லர்) ஆகிய இந்தச் சொற்கள் தொழிலையும், சாதியையும் குறிப்பன. எனவே அரச வழித் தோற்றம் கொண்டு தொழில்வழிச் சாதி தமிழகத்தில் நிலைபெற்றது.

### 8.6.2 தீண்டாமை

இந்தியச்சாதி அமைப்பை இரண்டாகப் பிரிப்பர். ஒன்று தீண்டாமைச் சாதிகள், (பறையர் காஸ்ட்). இரண்டு, இனக்குழுச் சாதிகள் (எத்தினிக் காஸ்ட்). சாதிப்பிரிவின் மிகப்பெரும் கொடுமை தீண்டாமை ஆகும். தீண்டாமை என்று புகுந்தது?

தமிழ் இலக்கியங்களை ஆராய்கிற போது தொல்காப்பிய இலக்கணத்தையும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டையும் ஆதிச் சான்றுகளாகக் கொள்ளுதல் வழக்கம். இவற்றுள் சாதி அடிப்படையில் தீண்டாமை பற்றிய குறிப்பு எதுவும் இல்லை. புறநானூறு பாணர், பறையர், துடியர், கடம்பர் என்பவரைச் சுட்டினாலும், தீண்டாமையை எங்கும் சுட்டவில்லை. பிற்காலத்தில் தமிழகத்தில் தீண்டாமை மிகப் பெரியதாகப் போற்றப்பட்டதைத் திருப்பாணாழ்வார் வரலாறும், நந்தனார் வரலாறும் தெரிவிக்கின்றன. தீண்டாமை இல்லாது இருந்த தமிழரிடையே அக்கொடும் குற்றத்தை அறிமுகப்படுத்தியவர் யார்? என்பதற்கு மநுதர்ம சாத்திரம் விடையளிக்கிறது.

> "சண்டாளன், விலக்காக இருப்பவள், பிணம், அதைத் தீண்டியவன் ஆகியோரைத் தீண்டினால் ஸ்நானம் செய்ததும் தூய்மையாகும்."
>
> 'ஒருவன் பிறந்த போதும் தீட்டு உண்டு'

மநுதர்ம சாத்திரத்தைத் தமிழக அரசர் தம் சட்ட நூலாகக் கொண்டுவிட்டதை மநுநீதிச் சோழன் என்ற அரசன் பெயரும், அவனைப் பற்றிய சிலப்பதிகாரக் குறிப்பும், பிற்காலத்தில் பெரிய புராணம், திருவிளையாடல் புராணம் ஆகியவற்றுள் இடம்பெற்றுள்ள மநுவைப் பற்றிய குறிப்பும், கல்வெட்டுகளில் சுட்டப்பெறும் மநுவைப் பற்றிய குறிப்பும் உறுதி செய்கின்றன. எனவே தீண்டாமை இல்லாத தமிழகத்தில் தீண்டாமையை அறிமுகம் செய்தவர் மநுதர்மத்திற்கு உரியவரே எனலாம்.

# 9

# மதம்

## 9.1 கடவுளும் மதமும்

முதல் அயோக்கியருடைய வஞ்சகத்தன்மையாலும் முதல் முட்டாளுடைய ஏமாளித்தன்மையாலும் மதம் தோன்றியது என்று பகுத்தறிவுவாதியான அறிஞர் கண்டர்செட் (condorcet) கூறினார். கடைசி அரசனுடைய குடலைக் கயிறாகக் கொண்டு கடைசி மதக் குருவைத் தூக்கில் இட்டுக் கொல்ல விரும்பினர் வால்டேர் வழி வந்த அறிஞர்கள். மதத்திற்கு எதிரான கருத்து தொடர்ந்து சொல்லப்பட்டபோதும் மக்கள் மதப்பிடிப்பிலிருந்து இன்னும் விடுபடாமல் இருக்கின்றனர். பெரும்பான்மையான மக்களுக்குக் கடவுள் ஒரு தவிர்க்க முடியாத இன்றியமையாமையாக இருக்கிறார். கடவுளையும் பக்தனையும் தொடர்புபடுத்தும் நிறுவனமாக மதம் செயல்படுகிறது. இளம் வயதில் ஐந்தாண்டு உயிரியல் ஆராய்ச்சிப் பயணத்தை பிகில் என்னும் கப்பலில் மேற்கொண்ட சார்லஸ் டார்வின் டியாரா டெல் ஃபியூகோ (Taerra del Fuego) எனும் இடத்தில் வாழ்ந்த பழங்குடிகள் கடவுள் பற்றியோ மதம் பற்றியோ கருத்து எதுவும் இல்லாது இருக்கின்றனர் என்று எழுதுகிறார். இக்கருத்து, பிற்காலக் களப்பயணத்தில் மறுக்கப்பட்ட போதிலும் கடவுள், மதம் ஆகியன பற்றிக் கருத்தில்லாத தொல் பழங்குடியினர் இடையே கடவுள் மதம் பற்றிய கருத்து இல்லாதிருந்தது. சிக்கல்கள் தொடரும் கூட்டமாக வாழும் மக்களிடையேதான் மதங்கள் மக்களின் தேவைக்காக உருவாகின்றன, கடைபிடிக்கப்படுகின்றன. கடவுள் உண்டா? இல்லையா? என்ற வினாவைவிட மதம் தேவையா? இல்லையா? என்னும் வினா எழுப்பப்பட்டு, தேவை

என்று உலகில் பல இன மக்கள் முடிவு செய்து ஏதேனும் ஒரு மதத்தைச் சார்ந்து வாழ்ந்து வருகின்றனர்.

## 9.2 மதத் தோற்றத்திற்கான காரணங்கள்

மதத் தோற்றத்திற்கும், கடவுள் வழிபாட்டுத் தோற்றத்துக்கும் மிகமிக நெருங்கிய தொடர்புகள் இருக்கின்றன. கடவுள் வழிபாட்டுத் தோற்றத்தின் சமூக நிறுவன அமைப்பே சமயம் என்றாகிறது.

### 9.2.1 வழிபாட்டின் தோற்றம்

கடவுள் நம்பிக்கை, வழிபாடு, பூசை ஆகியன உலகில் முதன்முதல் என்று தோன்றின? எப்படித் தோன்றின? ஏன் தோன்றின?

1. உலகம் மிகப் பெரியது. அதனைக் கடல் நீரும், ஆறும், மலைகளும், பாலைவெளிகளும், காடுகளும் ஆங்காங்கே பிரிவினை செய்துள்ளன.
2. இயற்கையால் ஏற்பட்ட உலகப்பிரிவுகள், மனித இனத்தையும் பிரித்தன. வெவ்வேறு நிறமும், தோற்றமும், பழக்கமும், பண்பாடும் உடைய மனித இனங்கள் உலகம் முழுதும் சிதறிக் கிடக்கின்றன.
3. உடல் உறுப்புகளுக்கு இணையாக மனித இனத்துடன் மொழிகள் பல தோன்றியுள்ளன. அம்மொழிகளும் மனித இனங்களைப் பிரித்துள்ளன.
4. மனிதனின் சூழ்நிலைக்குத் தக, அவனது சிந்தனையும் செயலும் அமைகின்றன. எனவே அவற்றின் வேறுபாடுகளுக்கு ஏற்ப மனித இனச் சிந்தனைகளும் வேறுவேறு வடிவில் தோன்றுகின்றன.

ஆகவே, உலக விரிவு - பிரிவு, மனித இன வேறுபாடு - கூறுபாடு, மொழிகளின் பன்மை - தன்மை, சிந்தனைகளின் தோற்றம் - மாற்றம் ஆகியன உலகம் அளாவிய வினாக்களுக்கு விடையளிப்பதைச் சிக்கலாக்குகின்றன.

### 9.2.1.1 வழிபாட்டின் பொதுமை

மனிதச் சிந்தனைகள் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் குறிப்பிட்ட சிக்கல்களைத் தீர்ப்பதற்காக எழுகிறபோது பேரளவு ஒத்துள்ளன. சில போது ஓரிடத்தில் தோன்றிய மனிதச் சிந்தனைகள், இனம் பரவுதலுக்கு ஏற்ப உலகெங்கும் பரவுகின்றன. இப்பரவுதல், ஓர் இனம் இடம்விட்டு இடம் பெயர்வதாலும் - நிகழும். ஓர் இனமக்களைப் பிறிதோர் இன மக்கள் வணிகம்,அரசியல், மதம் இவை தொடர்பாகச் சந்திப்பதாலும், கலப்பதாலும், நிகழும். ஆக, உலகளாவ ஏதேனும் ஒரு பொதுச் சிந்தனை தென்பட்டால் அதற்கு அடிப்படைக் காரணங்கள் ஐந்து ஆகலாம்.

#### 9.2.1.1.1 மனித இனத்தின் குறிப்பிட்ட சூழலில் எழுவது

சான்று - கடவுள் நம்பிக்கை பிறப்பதற்கு முன் மனிதன் எங்கிருந்தான்? இறப்பிற்குப்பின் அவன் எங்கு இருப்பான்? உண்ணக் காய், கனி, கிழங்குகளையும் உறைய மலைக் குகைகளையும் பருக நீரையும், அல்லும் பகலும் ஒளியையும் படைத்தது யார்? இவ்வினாக்களுக்கு விடைதான் கடவுள். இவ்வினாக்களும் விடையும் எல்லா மக்களுக்கும் தோன்றியிருக்கக் கூடும்.

#### 9.2.1.1.2 இன இடப்பெயர்ச்சியால் எழுவது

ஐரோப்பியர் கி.பி. 17, 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் தம் மண்ணிற்குரிய சிந்தனைகளோடு உலகு எங்கும் பரவினர். அவர்தம் சிந்தனைகளும் செயல்களும் பரவின. பண்டைய நாளில் ஆரியர் இந்தியாவிற்கு வந்தனர்; அவருடன் அவர்தம் பழக்க வழக்கங்களும், பண்பாடும் வந்தன; பரவின.

#### 9.2.1.1.3 வணிகக் கூட்டுறவால் எழுவது

கி.மு. சில நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே, திராவிட நாட்டு மேலைநிலக் கடலோரப் பகுதிகளுக்கும், நடுநிலக் கடலோரப் பகுதிகளுக்கும் இடையே வணிகப் போக்குவரத்து நடந்தது. இதன் விளைவாகத் திராவிடப் பொருள்களும், திராவிட மக்கள்தம் நம்பிக்கைகளும் நடுநிலக் கடலோரப் பகுதிகளுக்குச் சென்றன. நடுநிலக் கடலோர நாடுகளான கிரேக்கம், உரோம், எகிப்து முதலிய

நாடுகளின் பொருள்களும், அந்நாட்டு மக்களின் சில பழக்கங்களும் திராவிட மாநிலங்களில் பரவின. ஐரோப்பியர்தம் வணிகவிரிவால் அவர் தம் சிந்தனைகளும், பண்பாடுகளும் இன்றும் உலகெங்கும் பரவியுள்ளன.

### 9.2.1.1.4 அரசியல் படையெடுப்பால் எழுவது

கிரேக்க உரோமரின் படையெடுப்பு ஐரோப்பிய ஆப்பிரிக்க நாடுகளின் மீது கி.மு. சில நூற்றாண்டுகளுக்கு முன்பும் பின்பும் நிகழ்ந்தது. கி.மு. முதல் சில நூற்றாண்டுகளில் திராவிடத் தமிழர் தம் படையெடுப்பு இலங்கை வட இந்திய ஆரிய நாடுகள் மீதும் கி.பி. 10-ஆம் நுற்றாண்டளவில் மலாயா, கடாரம் மீதும் நிகழ்ந்தது. முகமதியர் தம் படையெடுப்பு பேரளவு வட இந்தியாவிலும், ஓரளவு தென்னிந்தியாவிலும் இடைக்காலத்தில் தொடர்ந்து நிகழ்ந்தது. ஒரு நாட்டிற்கு உரிமையற்ற வேறு இன மக்கள் படையெடுப்பு நிகழ்த்தி, வெற்றிகொண்டு அந்நாட்டிலேயே நிலை நிற்கும் போது அவர்தம் சிந்தனைகளும் செயல்களும் கலக்கின்றன.

### 9.2.1.1.5 மதம் பரப்புதலால் எழுவது

கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னும் புத்த மதம் இந்தியாவிலிருந்து இலங்கை, இந்தோசீனா, கம்போடியா, சப்பான், பர்மா, நேபாளம், திபெத் முதலான நாடுகளில் பரவியது. இடைக்காலத்தில் இசுலாம், அரேபியா, பாரசிகம் வழி உலகெங்கும் பரவியது. கிபி 17, 18, 19-ஆம் நுற்றாண்டுகளில் கிறித்தவம் உலகம் முழுதும் பரந்தது. ஆக ஒரு குறிப்பிட்ட கொள்கைக்கோட்பாடு உடைய மதம் பிறந்த இடமன்றிப் பிற இடங்களுக்குப் பரவுகிற போது அம்மதத்தின் கொள்கைகளும் நம்பிக்கைகளும் பரவுகின்றன.

எனவே பண்பாட்டு ஒப்பீட்டு ஆராய்ச்சியில் உலக வரலாற்று அறிவும், இனவரலாற்று அறிவும் தேவையாகின்றன. இரண்டு நாடுகளின் வரலாற்றையும் இன வணிக அரசியல் மதத் தொடர்புகளையும் நன்கு ஆராய்ந்த பிறகே பண்பாட்டு ஒற்றுமைக்கான காரணத்தை நுவல முடியும்.

குறிப்பிட்ட அரசியல், பொருளியல், சமூக இயல் சூழல்களில் ஒத்த பண்பாடுகளும் அங்கங்கே தன்னிச்சையாகத் தோன்ற வாய்ப்பு உண்டு.

## 9.3 இயற்கை வழிபாடு

உலகளாவிய கடவுள் நம்பிக்கை, வழிபாடு, பூசை ஆகியவற்றைப் பொறுத்த அளவில், அவை அச்ச அடிப்படையிலும், அன்பு அடிப்படையிலும் தன்னிச்சையாகத் தோன்றித் தழைத்திருத்தல் வேண்டும். அன்பு காட்டுவனவற்றிற்கு நன்றி காட்டுவதும்; அச்சம் ஊட்டுவனவற்றிற்கு அடிபணிவதும் மனிதச் செயல்கள். நிலம், நீர், தீ, காற்று, விண் என்ற ஐம்பூதங்களும் மனிதனுக்கு நன்மை செய்வனவாயும், தீமை செய்வனவாயும் திகழ்ந்தன நிலம் அவனுக்குக் காய், கனி கிழங்குகளைத் தந்து நன்மை செய்தது; ஒன்றும் விளையாமல் வாடி வறண்டு, அவனுக்குத் தீமை செய்தது. நீர் அவன் தாகத்தைத் தணித்தது; பயிர்களுக்கு நன்மை விளைத்து சில சமயங்களில் கொடு மழையாகக் கொட்டியும், கடலாகக் கொந்தளித்தும் துன்பம் விளைத்தது. தீ அவன் உணவுகளைச் சுட, சமைக்க, குளிரில் காய, நன்மை செய்தது. சில சமயங்களில் எரிபிழம்பாகக் காடுகளை அழித்தது. வீடுகளை அழித்தது; காற்று களைப்புற்ற அவனுக்கு உதவியது; சுவாசமாக உயிர் தந்தது. சில வேளைப் புயலாக மாறி அவன் வீட்டையும் காட்டையும் அழித்தது. விண் நிலவாக, மழையாகக் குளிர்ச்சி செய்தது. கதிர் ஒளியாகப் பயன் தந்தது. மழைபொய்த்தது, கதிர் சுட்டது. ஆக இயற்கை தரும் நன்மைகள் அவனை அன்பு செய்யவைத்தன. அவைபடுத்தும் துன்பங்கள் அவனை அச்சப்படுத்தின. நன்மை செய்த ஒருவர் மீது அன்பு காட்டினால் அவர் மேலும் நன்மை செய்வார்; தீமை செய்த ஒருவர் முன் பணிந்து போற்றினால் அவர் தீமை செய்யாது இருப்பார். அதன் விளைவே ஐம்பூத வழிபாடு. நிலத்தை வழிபடுதல் பூமாதேவி வழிபாடாக மாறிற்று; நீரை வழிபடுதல் என்பது கங்கா தேவி / வருண / மழை / இந்திர வழிபாடாயிற்று. தீ வழிபாடு சிவ வழிபாடாயிற்று. காற்று வழிபாடு வாயு / அனும வழிபாடாயிற்று. விண் வழிபாடு சூரிய, சந்திர வழிபாடுகள் ஆயின.

## 9.4 முன்னோர் வழிபாடு

மனிதனுடன் வாழ்ந்த மூத்தோர், முதுமையால், நோயால் இறந்தனர். உடன் வாழ்ந்த மாந்தன் இறந்த முதியவர் இருக்கும் போது, அவனிடம் காட்டிய பேரன்பை எண்ணினான். அவர் செய்த பெருஞ் செயல்களை, உதவிகளை எண்ணினான். அவர் இறப்பின் அவர் மூச்சுக் காற்று விண்ணில்தானே உள்ளது என்று காற்றோடு கலந்துவிட்டார் என்று எண்ணினான். அவர் விண்ணில் இருக்கிறார் அவரைத் தொடர்ந்து நினைப்போம் என்று எண்ணி பூசைகள் செய்து முன்னோர் வழிபாட்டுக்கு அடித்தளம் இட்டான் ஆதி மனிதன். அவர் நினைவாகப் பல இடங்களில் உருவ வழிபாடாக நடுகற்களை அமைத்தான். அவையாவும் வழிபடு கோயில்கள் ஆயின. இறந்தோரை நடுகல்லில் உருவமாகச் செதுக்கி, பெயரும், பீடும் எழுதி வழிபட்டதன் விளைவாக முன்னோர் வழிபாடு தொடரலாயிற்று.

இறந்த நல்லவர் மனித நினைவில் நிலைத்தது போல இறந்த தீயவரும், அவன் நினைவை விட்டு, அவன் கனவை விட்டு அகல மறுத்தனர். வாழும்போது தீங்குகள் செய்தது போலவே அவர் இறந்தபின்பும் தீங்குகள் செய்யக் கூடும் என்று வழிபடத் தொடங்கினர். ஆவி அல்லது பேயாக வந்து அல்லல்படுத்தக் கூடும் என்று பூசை செய்யவும், இறந்தார் நினைவுக் கடன் செய்து வழிபடவும் செய்தான் மனிதன். இவ்வாறு முன்னோர் வழிபாடு இன்றும் நிலைத்தது.

ஆக, அன்பும் அச்சமும் நன்றி உணர்வும் வழிபாட்டின் தோற்றத்திற்கான காரணங்கள். மதம் என்ற நிறுவனமும், அரசு என்ற நிறுவனமும் ஏறத்தாழ ஒரே வேரில் கிளைத்த அடிமரத்தின் இருகிளைகளாகும். ஆதி மனிதச் சமுதாய அமைப்பில் மதமும் அரசும் கிட்டத்தட்ட ஒன்றாகவே இருந்திருத்தல் வேண்டும். வழிபாட்டில் தலைமை நிலையில் இருந்த பூசாரி ஊருக்கும் தலைவனாக இருந்திருத்தல் வேண்டும். பூசாரி உரிமை பரம்பரை உரிமை ஆனது போல அதிலிருந்து கிளைத்த அரசு உரிமையும், பரம்பரை உரிமை ஆகி இருத்தல் வேண்டும். இரண்டும் தனித்தனி ஆனபோது ஒன்றிற்கு அனுசரணையாக மற்றொன்று இருந்திருத்தல்

வேண்டும். உலகில் தோன்றிய ஆதிப்படைப்புகள் அனைத்தும் இவ்வூகத்தை உறுதிசெய்யும் வண்ணமே அமைந்துள்ளன.

## 9.5 சமயமும் அரசும்

விவிலியத்தில் வரும் மோசஸ், திருக்குர்ரானை இறைவழி அருளிய முகமது நபி, பாண்டவர் படைக்கு அரசியல் ஆலோசகராக இருந்து பகவத்கீதை அருளிய கிருஷ்ணன் ஆகியோர் அனைவரும் மதத்தலைவர்களாகவும் அரசியல் தலைவர்களாகவும் இயங்கி உள்ளனர். அரண்மனையில் வாழ்ந்து அரசிளங்குமரனாக விளங்கிய மகாவீர வர்த்தமானர் 24ஆம் தீர்த்தங்கரராக இருந்து சைன சமயத்தைப் பரப்பிய செய்தி, அரசிளங்குமரனாக இருந்து அரண்மனை வாழ்வைத் துறந்து ஞானியாகி பௌத்த சமயம் தோன்றக் காரணமாக இருந்த சித்தார்த்தன் ஆகியோர் வரலாறும் அரசுக்கும் சமயத்துக்கும் இடையே இருந்த நெருக்கமான உறவைப் புலப்படுத்துவனவாகும். ஐரோப்பிய வரலாற்றில் போப்பாண்டவரே அரசராக இருந்ததும், தனி அரசு மகுடம் ஏற்று ஆட்சி செய்த காலத்தில் போப்பா அரசனா எனப் போட்டி வந்ததும் இங்கே நினைவுகூரத்தக்கன. பின்னாளில் இசுலாமியப் படையெடுப் பையும் வெற்றியையும் அடியொற்றி இசுலாமிய சமயம் உலகம் முழுதும் பரவியதும், ஐரோப்பியரின் காலனி ஆட்சியை ஒட்டி உலகம் முழுதும் கிறித்தவ சமயம் பரவியதும் நினைக்கத்தக்கவை. தமிழ் நாட்டை ஆண்ட அரசர்கள் பல்லவர் காலம் தொடங்கிச் சமயத்தோடு தம்மை அடையாளப்படுத்திக்கொண்டதும் கருதத்தக்கவை. மகேந்திரபல்வன் சைன சமயத்தோடு தொடர்பு கொண்டதும், முதல் இராசராச சோழன் சைவ சமயத்தோடும், குலோத்துங்கன் வைணவ சமயத்தோடும், பாண்டியன் கூன் நெடுமாறன் சைவ சமயத்தோடும் தம்மை நெருக்கமாக அடையாளப்படுத்திக்கொண்ட நிகழ்ச்சிகள் இங்கே நினைவு கூரத்தக்கவை. ஆக கடவுள் - வழிபாடு - சமயம் - அரசு ஆகியன ஒன்றோடு ஒன்று சங்கிலித் தொடர் போலப் பின்னிப் பிணைந்தவை.

### 9.5.1 சமயத் தோற்றத்திற்குக் காரணம் மந்திரத் தோல்வி

அறிஞர் ஃபிரேசர் (Frazer) சமயம் மந்திரத்தின் தோல்வியிலிருந்து தோன்றியது என்பார். பல்வேறு இனமக்களின்

பழக்க வழக்கங்களைத் தொகுத்து ஆராய்ந்த அவர் ஆதி மனிதன் தான் விரும்பியவற்றைப் பெறுவதற்கு மந்திரவழி முயற்சி செய்தான். மந்திரத்தை மீண்டும் மீண்டும் தியானிப்பதன் மூலம் தெய்வீகச் சக்திகளைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முயன்றான். அவன் முயற்சி நிறைவேறாத போது தெய்வீக சக்திகளிடம் சரண் அடைந்து வணங்கி வழிபட்டு வாழத் தொடங்கினான். சமயம் இவ்வாறு மந்திரத்தின் தோல்வியிலிருந்து கருக் கொண்டது என்று நம்பினார்.

### 9.5.2 மானா

எமில் துர்கேம், சமயம் சடங்குகளிலிருந்தும் (rites), சடங்கு வினைமுறைகளில் இருந்தும் தோன்றிற்று என்று கருதினார். ஆத்திரேலியாவில் வாழும் மிகமிகப் பழைய குடியினரான அருண்டா மக்களிடையே கள ஆய்வு நிகழ்த்தி இந்த முடிவுக்கு வந்தார். தொடர்ந்து வேலைகளில் ஈடுபட்டுச் சலிப்படையும் மக்கள் ஒன்றாகத் திரண்டு ஆடிப்பாடுகிறார்கள். இதில் கலந்து கொள்ளும் மக்கள் ஆவேசமுற்று உணர்ச்சிப் பிழம்பு ஆகிறார்கள். சற்று நேரத்தில் இவ்ஆவேசம் அடங்கிவிடுகிறது. இடையில் தம் மேலுள்ள ஆவேசத்திற்கு அருவமான மறைவடக்க சக்தியான 'மானா' காரணமாக இருந்தது என்று நம்பினர். இச்சக்தியை வணங்குவதும் வழிபாடு செய்வதும் முறைமைப்படுத்தப்பட்ட போது அருண்டா பழங்குடிமக்களிடையே சமயம் எனும் நிறுவனம் உருக்கொண்டது.

### 9.5.3 குறியீட்டியம் (Totemism)

இச்சக்திக்கு குறியீடு ஒன்றை (Totem) வழங்கினர். இவை தாயத்துப் போலத் தனி உருவங்களாக அமையாமல் விலங்குகள், தாவரங்கள் இயற்கைப் பொருள்கள் முதலியனவும் சக்தியின் பிறப்பிடங்களாகக் கருதப்பட்டன. டோட்ட (குறியீட்டு) வழிபாடே உருவ வழிபாடாக வளர்ச்சி பெற்றது. ஆக மதம் என்பது புனிதப் பொருளான டோட்டத்துடன் (Totem) தொடர்பு உடைய நம்பிக்கைகளும் செயலாறுகளும் ஒருங்கே அமைந்த அமைப்பு முறையாகும். இதனை டோட்டமிசம் (Totemism) என்பர்.

சிவலிங்கம், சூலம், வேல் முதலான வழிபாடுகள் குறியீட்டு வழிபாடுகளே.

### 9.5.4 ஆன்மா

இறந்தவர்களுடைய ஆன்மா ஏதேனும் ஓர் இடத்தில் தங்கி இருக்கிறது என்றும் அது மனிதர்களுடன் தொடர்புடையது என்றும் நம்பப்படுவது அனிமிசம் (Animism) எனப்படும். இறந்தவருடையது அல்ல என்று நம்பப்படுகிற ஆன்மாக்கள் தங்களுக்கே உரித்தான இயல்புகளுடன் மரம், செடி, கொடி, ஏரி போன்ற இடங்களில் குடிபுகுந்து வாழ்வதாக நம்பப்படுவது அனிமாடிசம் (Animatism) தாயத்து, கறுப்புக் கயிறு கழுத்தணி முதலான பொருள்களை வைத்திருப்பவர்க்கு நன்மை நிகழும் என்று நம்புவது ஃபெட்டிசிசம் (Fetishism). முன்பு எமில் துர்க்கேம் குறிப்பிட்ட மானா என்னும் சக்தியை வழிபடுவது மேனிசம் (Manism). இப்படிப் பல்வேறு கடவுள் வழிபாட்டு முறைகள் இருக்கின்றன.

### 9.5.5 நனவிலிமனம்

உளவியல் அறிஞர் சிக்மன் ஃபிராய்டு நனவிலி மனத்திலிருந்து (Unconsious) மதம் தோன்றியிருக்க வேண்டும் என்று நம்பினார்.

### 9.6 மத வகைகள்

யூத மதம், கிறித்துவ மதம், இசுலாமிய மதம் ஆகியன ஒரு கடவுள் (Monotheism) கோட்பாட்டின. மாறாகப் பல கடவுளை நம்புவது பல கடவுட் கோட்பாட்டு மதம் (Polytheism - Pantheism) என்பர். தமிழர் பல தெய்வக் கோட்பாட்டினராக இருக்கின்றனர். எனவே நிறைய சிறுதெய்வங்கள் தமிழரால் வழிபடப்பட்டன; படுகின்றன. முன்னோர் வழிபாட்டிற்கும், சிறு தெய்வ வழிபாட்டிற்கும் மிக நெருக்கமான தொடர்பு இருக்கிறது. மிகப் பிற்காலத்திலேயே தமிழரிடம் ஏக தெய்வ வழிபாட்டு முறை அறிமுகமாகிப் பரவியது.

# 10

# சமூக நோயியல்

## *10.1 சமூக நோயியல் (Social Pathology) வரையறை*

தனி மனிதனின் விருப்பங்களுக்கும், சமூக மதிப்புகளுக்கும் இடையே உள்ள இசைவே சமூக அமைப்பு எனப்பெறும். தனிமனித விருப்பத்திற்கும், சமூக மதிப்பிற்கும் இடையே இடைவெளி தோன்றும் போதும், இசைவு இன்மை தோன்றும் போதும், பெருகும் போதும், சமூக ஒழுங்கு குலைகிறது. இதனை மெமோரிய (memoria) என்பர். சமூக ஒழுங்குக் குலைவு மக்களிடையேயும் குழுக்களிடையேயும் காணப்படும் உடன்பாட்டு இன்மையை, ஒத்துப் போகாமையைக் (mal-adjustment) காட்டுகிறது. தலைமுறை தலைமுறையாகச் சமூகத்தால் பின்பற்றப்பெறும் நெறிமுறைகள் வளர்ந்து தனி மனிதனும், தனித்தனிக் குழுக்களும் தம் விருப்பம் போல் வாழ முயலும் போது, வாழும் போது இச்சீர் குலைவு ஏற்படுகிறது. பிரஞ்சு சமூகவியல் மேதை எமில் துர்க்கேம் 'சமூகத்தின் பல பகுதியிடையே ஏற்படும் சமன்பாட்டுக் குலைவும் சமூக மக்களிடையே காணப்படும் ஒற்றுமை உணர்வுக் குலைவும் சமூக ஒழுங்குக் குலைவிற்குக் காரணங்கள் ஆகும்' என்கிறார். சமூக ஒழுங்குக் குலைவும், அதற்குரிய காரணங்களும் சமூக நோய்கள் எனப் பெறுகின்றன. சமூக நோயியல் பின்வரும் மூன்று அடிப்படைகளை ஆராய்கிறது:

1. சமூகத்தில் நோய்களை உண்டாக்கும் அடிப்படைகளை ஆராய்வது.

2. அதற்குரியவன் யார் அல்லது உரிய குழு எது, பரப்பும் ஆள்/ குழு யார், எது என்று ஆராய்வது.

3. மேற்கண்ட நோய்களை எவ்வாறு களைவது என்று ஆராய்வது.

மானுடர் இன்றிச் சமுதாயம் இல்லை. அதனைப் போலவே சமுதாயம் இன்றி மானுடர் இல்லை. எனவேதான், மானுடன் சமூக விலங்கு எனக் குறிக்கப்பெறுகிறான். ஒவ்வொருவரும் பின்பற்றத் தகும் பழக்க வழக்கங்களையும் பண்பாடுகளையும், அடிப்படை நம்பிக்கைகளையும் சமூகம், முன் அனுபவங்களை அடியொற்றி வரையறுக்கின்றது. ஒரு சிலர் இந்த வரையறைகளை, வரம்புகளை மீறத் துடிக்கின்றனர். மீறுகின்றனர். மீறுதலே சரி என்று வாதிடுகின்றனர். மீறினாலே வாழமுடியும் என்று நம்புகின்றனர். தமிழ்ச் சமுதாயத்தைப் பொறுத்தவரை இந்த மூன்றாம் கட்ட நிலை உருவாகிவிட்டது. சமூக நோயின் மிகக் கடுமையான கட்டத்தில் தமிழர் சமுதாயம் இருந்து வருகிறது என்பதை இது காட்டுகிறது. சான்றாகப் பின்வருவன எண்ணத்தக்கன.

1. பொய் பேசித்தான் வாழமுடியும், ஒருவன் தன் வாழ்நாள் முழுதும் உண்மை பேசி வாழ முடியாது. அப்படி அவன் உண்மை பேச விரும்பின் அவனால் வாழவே முடியாது.
2. நேர்மையாக வாழுதல் துன்பமானது; இயலாதது. நேர்மையற்று வாழ்தல் இன்றைய சமுதாய வாழ்வில் தவிர்க்க முடியாதது. என்வே எவருமே நேர்மையாளராக இருக்க முடியாது.
3. பொருளாதாரத்தைச் சார்ந்தோ, ஆண்/பெண் பால் உறவைச் சார்ந்தோ தவறுகள் நடக்கத்தான் செய்யும்; நடக்கும், அவை இயல்பானவை.
4. பொது வாழ்வில் தனி வாழ்வு (personal life) முதன்மையன்று ஒருவனது பொது வாழ்வு மட்டுமே முதன்மையானது. தனி வாழ்வில் நேர்மைக்கேடனாக இருக்கும் ஒருவன் பொது வாழ்வில் நேர்மைக்கேடனாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை எனும் நம்பிக்கை அல்லது தனி வாழ்வில் நேர்மை உள்ளவனாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை எனும் நம்பிக்கை.

5. தற்சார்புள்ளவனாக்கும் சாதிய வட்டத்தில் நேர் முகமாகவோ, அல்லது மறைமுகமாகவோ கட்டுண்டிருத்தல், செயல்படுதல்.

மேலே காட்டியன எல்லாம் தமிழரிடையே தற்போது பரவி இருக்கின்ற சமூக நோய்களுக்குச் சில சான்றுகள் ஆகும். காலம் தோறும் தமிழ்நாட்டில் தமிழர் இடையே பல்வேறு சமூக நோய்கள் இருந்து வந்துள்ளன. இவற்றின் இருப்பு மெய்ம்மையைத் தமிழில் உள்ள அற இலக்கியங்கள் காட்டுகின்றன. உலக மொழிகளில் மிகுதியாக அற இலக்கியங்களைப் பெற்றுள்ள மொழி தமிழ் என்று கருதப்பெறுகிறது. திருக்குறள், நலடியார், பழமொழி, ஏலாதி, சிறுபஞ்சமூலம், திரிகடுகம், முதுமொழிக் காஞ்சி, ஆசாரக் கோவை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது முதலாய பதினெண்கீழ்க்கணக்கு நீதி இலக்கியங்களும், பிற்காலத்தில் ஔவையார், குமரகுருபரர் முதலாயோர் எழுதிய நீதி இலக்கியங்கலும் தமிழ்மொழி நீதி இலக்கியங்களால் நிரம்பிய, மொழி என்பதைக் காட்டுகின்றன. அது மட்டுமல்லாமல் தமிழர்களிடையே நீதி இலக்கியம் படைப்பதற்கான தேவைகள் நிறைந்து இருக்கின்றன என்பதையும் மேற்கண்ட நீதி நூல் வரிசை எடுத்துரைக்கின்றது.

தமிழர் வரலாற்றில் காலம் தோறும் நிகழ்ந்த உட்பூசல்கள், போர்கள், அயல்நாட்டு ஆதிக்கம் ஆகியன மேற்கண்ட செய்தியை உறுதி செய்கின்றன. சங்கம் மருவிய காலத்தில் தமிழ் இலக்கியங்கள் மிகுதியாகத் தோன்றாமைக்குக் காரணத்தை ஆராயும் அறிஞர் டிவி. சதாசிவப்பண்டாரத்தார் எடுத்துரைக்கும் செய்தி கவனத்திற்கு உரியது. அயல்நாட்டார் வரவால் தமிழர் வாழ்வில் ஏற்பட்ட சீர்குலைவே தமிழ் அறிஞர் பலரை நீதி இலக்கியங்கள் எழுதத் தூண்டிற்று என்பார் அவர்.

பண்டாரத்தார் கூற்றை முழுமையாக ஒப்புக்கொள்ள இயலாவிடினும் சீர்குலைவே அற இலக்கிய எழுச்சிக்கு அடிப்படையாயிற்று என்ற உண்மையை ஒப்புக்கொள்ளலாம்.

சமூகத்திற்கும், தனி மனிதனுக்கும் இடையே ஏற்படும் இடைவெளிக்குரிய காரணங்களுள் ஒன்று அயல்நாட்டார் வரவு. ஈதன்றிச் சமூக நோய்க்குரிய குற்றங்கள் தோன்றப் பல காரணங்கள்

இருக்கின்றன. இவற்றை ஆழமாக ஆராய்ந்த இ.எச். சுத்தர்லேண்டு (E.H. Sutherland) ஆறு காரணிகளை நிரல்படுத்துகிறார்.

1. சமயத்தையும், சாதிக் கட்டுப்பாட்டையும் சார்ந்து எழுவது.
2. தற்காலிகமான குற்றங்கள். இவை ஒரு நாளில்/ஒரு வாரத்தில்/ஓர் ஆண்டில் தோன்றவது.
3. சமுதாயம், சமூகத்தில் ஒருவன் சார்ந்துள்ள குடும்ப நிலை, படிப்பு, செய்கின்ற தொழில், வருமானம் முதலானவற்றைச் சார்ந்து எழுவது.
4. நிறுவனங்களைச் சார்ந்து எழுவது.
5. உடல் சார்ந்து எழுவது.
6. உள்ளம் சார்ந்து எழுவது.

இவற்றை மேலும் ஆராய்ந்த அறிஞர் தோப் (Doop) என்பவர் மனிதத் துன்பம் (Human Misery), பெரிதுபடுத்தி மதிப்பிடுதலும் தண்டனைகளைக் குறைவாக மதிப்பிடுதலும், குற்ற விசாரணையும் குற்றப்பகுப்பு பற்றிய அறிவும் என வகைப்படுத்துவார்.

### 10.1.1 மனிதத் துன்பம் (Human Misery)

தவறு செய்யத் தூண்டுகின்ற துன்பங்கள் - போதிய கல்வி அறிவு இல்லாமை, குடும்பத்தின் ஏழ்மை நிலை, உள்ளம் பிறழ்ந்த நிலை, கட்டுப்பட இயலாத உணர்ச்சி.

### 10.1.2 பெரிதுபடுத்தி மதிப்பிடுதலும் தண்டனைகளைக் குறைவாக மதிப்பிடுதலும் (Lower Estimation of Rewards and Under Estimation of Punishment)

இந்தியா போன்ற நாடுகள் முதலாளித்துவத்தின் ஒரு கூறாகிய போட்டிப் பொருளாதாரத்தைப் பின்பற்றுகின்றன. வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் போட்டி திணிக்கப்படுகிறது. அதில் ஒருவர் பெறும் வெற்றி பெரிய அளவில் விளம்பரப்படுத்தப் பெறுகிறது. இலாட்டரி சீட்டில் சிலரே பரிசுபெற விளம்பரத்தால் பல்லோர் மனத்தில் இலாட்டரி சீட்டு வாங்கும் ஆர்வம் பெருக்கப்படுகிறது. அதனைப் போலவே வணிகத்திலும், தொழிலிலும் ஈடுபடும் மனிதர் குறுக்கு வழியில் சம்பாதிக்க

எண்ணுகின்றனர். குறுக்கு வழியில் வெற்றி பெற்றால் பெரும் லாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கை அவரைத் தவறு செய்யத் தூண்டுகிறது. எனவே, வெகுவாகத் தவறு செய்கிறார். சான்றாக இரயில்வே துறை உயர் சோதனை அதிகாரி எனச் சொல்லிக் கொண்டு நாள்தோறும் முதல் வகுப்புக் குளிர்ப்பதனப்பெட்டியில் டிப்டாப்பாகப் பயணம் செய்த ஒருவன் முன்பு கண்டுபிடிக்கப் பட்டான் (11.2.91, இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளேடு).

## 10.2 குற்ற விசாரணை, குற்றப் பகுப்பு – பற்றிய அறிவு

ஐரோப்பியர் வரவால் இந்தியச் சிற்றூர்களில் இருந்த கிராமத் தன்னாட்சி முறை முற்றுமாகச் சீர் குலைந்துவிட்டது. அந்த அந்தத் தெருவில் அல்லது ஊரில் நிகழும் குற்றங்கள் பாதிக்கப் பட்டோரால் ஊர்ப் பஞ்சாயத்துக்குக் கொண்டு வரப்பெற்றுக் குற்றவாளிகள் விசாரிக்கப்பெற்றனர். குற்றவாளியின் இயல்பு, அவன் குடும்பப் பின்னணி, அவனது பழைய வாழ்க்கை ஆகிய அனைத்தையும் நேர்முகமாக அறிந்திருந்த பஞ்சாயத்தாரும், ஊராரும் கூடியவரை சரியான நீதியை வழங்க முடிந்தது. ஐரோப்பியர் வரவால் நீதிமுறை உள்ளூரில் இருந்து வெட்டப் பெற்று மாவட்ட நீதிமன்றங்களுக்குக் கடத்தப்பட்டது. உண்மையும் நீதியும் கடத்தப்பட்டன. மாவட்ட நீதிபதியோ அரசு வழக்குரைஞரோ, பிற வழக்குரைஞர்களோ வாதி பிரதிவாதி ஆகியோர் மெய்வாழ்க்கையைப் பெரும்பாலும் அறிந்து இருப்பதில்லை. சமூகக் குற்றவாளி தன்னுடைய குற்றத்தின் அளவு, அதற்குரிய தண்டனை அனைத்தையும் அறிந்து இருக்கிறான். என்னென்ன வழிகளில் தப்பிக்கலாம் என்பதையும் அறிந்திருக்கிறான். சான்றாகக் கொலை செய்யும் ஒருவன் கையில் ரப்பர் உறையை மாட்டிக் கொலை செய்கிறான். தடயம் மறைக்கப்படுகிறது. அனைத்துப் பாவங்களையும் செய்த குற்றவாளிகள் கூட, குற்றம் காவல்துறையினரால் நிறுவப்பட வில்லை எனும் நிலையில் விடுதலை செய்யப்பெறுகின்றனர். சமூகக் குற்றம் புரிவோர் நல்ல அறிவாற்றலால் திறமையால் குற்றத்தை இழைத்துவிட்டுத் தப்பித்துக் கொள்பவர்களாகக் காணப் படுகின்றனர்.

பழங்காலத்தில் தமிழகத்தில் சமுதாயத்தை ஆள்வதற்கு என்று சட்டப் புத்தகம் எதுவும் தனியே இருக்கவில்லை. அந்தந்த ஊரிலும் அரசிலும் பின்பற்றப்பட்டு வந்த நீதிமுறைகளே சட்ட முறைகளாகப் போற்றப்பெற்றன. இன்னாநாற்பது, நீதிக்கதைகள், பழமொழிகள் இவையே சட்டப் புத்தகங்கள். தண்டனை கடுமையாக இருந்தது. திருட்டுக்குத் தலையை வெட்டும் மரணதண்டனை வழங்கப்பட்டது. சிலப்பதிகாரம் சான்று.

'கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று'

என்று பாண்டிய மன்னன் கூற்றால் அறியமுடிகிறது. கொடுமையாளர்க்குத் தண்டனை விதிக்கப்பட்டது.

கொலையில் கொடியாரை வேந்து ஒறுத்தல்
பைங்கூழ் களைகட்டதனோடு நேர். (குறள் 550)

நல்லோரால் மழை பொழியும்; அல்லோரால் மழை பொழியாது; அதனால் கொடும்பாவி கட்டி இழுக்கும் பழக்கமும் இருந்துளது. கொடியவர்கள் இருப்பு உலகத்துக்கு நல்லது அன்று. அதனால் அவர்களை அழிக்க எண்ணினர் என்பதற்குக் கொடும்பாவி எரிப்பு ஒரு அடையாளம்.

சமுதாய நோய்களுக்கான காரணங்களுள் பொருளாதாரமே மிகவும் முதன்மையாகக் கருதப்படுகிறது. பொருள் இல்லாவிட்டால் கொலை, கொள்ளை செய்யத் தூண்டுகிறது மனம். எவ்வாறாயினும் தமிழ்ச் சமுதாயத்தின் இடையே பலவேறு குற்றங்கள் பல்கிப் பெருகி இருக்கின்றன என்பது தெளிவு. திருட்டு, கொலை, கற்பழிப்பு முதலாயின சமூக நோய்கள்.

அடுத்தது தாம் தாம் சார்ந்து இருக்கும், சாதி, மொழி, மதம், நிறம், இனம் ஆகியவற்றைக் கடந்து மானுடன் என்ற சகோதர உணர்வையோ மானுடர் ஆன்மாவின் உறைவிடம் என்ற சமய உணர்வையோ மக்கள் பெறுவதற்கான வாய்ப்புகள் தொடர்ந்து குறைந்துகொண்டே வந்துள்ளன. மானுடர்களைப் பிரிக்கும் மேற்கண்ட பிரிவினைகள் தேர்தல் முதலான சுயநலக் காரணங்களால் பெருக்கப்பட்டே வந்துள்ளன.

மனிதனின் மனநிலையைச் சிக்மன் ஃபிராய்டு ஈத், ஈகோ, சூப்பர் ஈகோ என்ற மூன்றாகப் பகுப்பார். அவற்றுள் ஈத் என்பது விலங்குணர்ச்சி மேலிட்ட மனநிலை ஆகும். கூர்ந்து கவனித்தால் இந்திய நாட்டில் பால் ஆசை, தேவை ஆசை, வசதி ஆசை, சார்பு ஆசை ஆகிய நான்கும் பெருகின. பெருகி, மானுடத்தை விலங்குகள் ஆக்கின. எனவே விலங்கின் இயல்பாகிய வன்முறை மூலம் பால் ஆசையைத் தீர்க்கவும், தேவை ஆசையைத் தீர்க்கவும், வசதி ஆசையைத் தீர்க்கவும், சார்பு ஆசையைத் தீர்க்கவும் வழிகள் அமைந்தன. ஆட்களை அடித்துக் கொன்று திருடும் வன்முறை பெருகி வருவதுடன் முதன்மை பெற்று வருதலையும் காணலாம். வன்முறை முதன்மை பெற்று வருவதற்கு நம் அரசியல் அமைப்புத் தலையாயக் காரணம்.

1. சூதாட்டம், குடி, விபச்சாரம், வன்முறை - கொலை
2. அரசியல், பொய், வீம்பு, வன்முறை - கொலை
3. சார்பு, வெறுப்பு, விலக்கு, வன்முறை - கொலை
4. பதவி, அதிகாரம், ஆணவம், வன்முறை - கொலை

மேற்கண்ட சமூக நோய்க்குரிய குற்றங்கள் ஒன்றோடொன்று சார்ந்து இருப்பதை உணரலாம்.

## இன்றியமையாத் துணை நூல்கள்


**அறவாணன். க.ப., டாக்டர்**

1. *தமிழ் இலக்கியச் சமூகவியல், தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1992.*

2. *தமிழ்ச் சமுதாயம் நோயும் மருந்தும், தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1994.*

3. *தமிழ்ச் சமுதாய வரலாறு - பண்டைக்காலம், தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1992.*

4. *தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1994.*

5. *தமிழா, தலைமை தாங்கவா, தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1997.*

6. *பாம்பு வழிபாடு, தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1979.*

**இலக்குமிரதன் பாரதி. சோ.**

*நமது சமூகம், 1, இரண்டாவது வாய்க்கால் குறுக்குச் சாலை, காந்திநகர், சென்னை - 600 020.*

**எங்கல்சு**

*குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1989.*

**சுந்தரம், டாக்டர் & குழுவினர்**

*சமூகவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1986.*

**தாயம்மாள் அறவாணன், டாக்டர்**

1. உறவுமுறைகள், தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1987.

2. தையல் சொல் கேளீர், தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 2001.

3. பெண்ணறிவு என்பது, தமிழ்க்கோட்டம், 11, மோகன் நகர், புதுச்சேரி - 605 005, 1992.

**பரமேஷ், செ.ரா. டாக்டர்**

*சமூக உளவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1973.*

**பாஸ்கரன், க.,**

*சமுதாயத்தத்துவம், எட்டாம் உலகத் தமிழ் மாநாடு, பதிப்புச் சுழல்நிதி வெளியீடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1994.*

**பாஸ்கல் கிஸ்பர்ட், எஸ்.ஜே.,**

Fundamentals of Sociology, *தமிழாக்கம், ஜெ. நாராயணன், தமிழ்வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு அரசு, 1964.*

**Bottomore, T.B.**

Sociology, a guide to problems and literature, Blackie & Son (India) Ltd., 1986.

**Ruth Benedict,**

Patterns of Culture, Houghton Mufflin Company, Boston, 1989.

# பொருள் அடைவு

(எண்கள் பக்கங்களைக் குறிக்கும்)

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| AN INTRODUCTION TO RELIGION AND PHILOSOPHY - TEVARAM AND TIVVIYAPPIRAPANTAM | 200.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| நாட்டுப்புறக் கதைகளும் நாடக ஆக்கமும் | 30.00 |
| A BUNCH OF ESSAYS ON TAMIL LITERATURE | 30.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| நானும் என் எழுத்தும் | 50.00 |
| தமிழர் கட்டிடக்கலை | 30.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| எழுத்திலக்கணக் கோட்பாடு | 70.00 |
| சதகத்திரட்டு தொகுதி-2 | 55.00 |
| தமிழ்ப் பண்பாடு | 25.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை-4 | 70.00 |
| சுவடிச்சுடர் | 120.00 |
| தமிழிலக்கியத்தில் ஊனமுற்றோர் | 45.00 |
| தமிழக மகளிரியல் | 80.00 |
| தமிழ் மொழி-இன-இல்க்கிய மேம்பாடு | |
| மறைமலையடிகளாரின் பங்களிப்பு | 20.00 |
| அறிவியல் தொழில் நுட்பக் கல்வி இன்றைய சந்தைச் சவால்கள் | 25.00 |
| ம.பொ.சி யின் தமிழ் உணர்வு | 40.00 |

Pub.No.435 **தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் 25.00**